1. அதில் சிறந்த வர்ஜீனியா புகையிலை சேர்ந்திருக்கிறது.

2. கைதேர்ந்தவர்களால் 'ப்ளெண்ட்' செய்யப்பட்டது.

3. நன்றாக 'பாக்' செய்யப்பட்டிருக்கிறது.

4. நல்ல தர காகிதத்தில் சுற்றப்பட்டிருக்கிறது

5. பூரண சுகாதார முறையில் தயாரிக்கப்பட்டது.

6. தொண்டைக்கு கெடுதி செய்யாது.

## 10 காரணங்கள்-நம்பர் டென் முன்னணியில் இருகக.

7. லக்ஷக்கணக்கான திருப்தியடைந்த உபயோகிப்பவர்களின் அனுபவத்தைக்கொண்டு பெயர் பெற்றது.

8. பெயர்போன கார்டன் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்டது.

9. பணத்துக்குத் தகுந்த மதிப்புள்ளது

சுருக்கமாகச் சொல்லப்போனால் நம்பர் டென் முன்னணியில் நிற்கக்காரணம்

10 அதன் வகையில் அதுதான் மிகச்சிறந்த சிகரெட்.




நம்பர் டென் வர்ஜீனியா

கல்கி

# பொருளடக்கம்

மலர் 7 இதழ் 35 | மார்ச் 28 | சர்வசித்து ஆ பங்குனி 15

| | | | |
|---|---|---|---|
| என்ன சேதி ? | ... | ... | 7 |
| நிகழ்ச்சிச் சித்திரம் | சாஸ்திரி | ... | 9 |
| ஒரு பொறிதான் பாக்கி ! | ... | ... | 10 |
| தெய்வத்தின் சோதனையோ ? | காட்டூர் கண்ணன் | ... | 12 |
| இந்தியாவின் முதல் கப்பல் | எம். பக்தவத்ஸலம் | ... | 15 |
| அன்பு வெற்றி பெற்றது | பாக்கிய சங்கர் | ... | 18 |
| அலை ஓசை | கல்கி | ... | 21 |
| மாந்தருக்குள் ஒரு தெய்வம் | ரா. கி. | ... | 30 |
| நடக்காத கல்யாணம் | பாலு | ... | 37 |
| காலக்ஷேபம் | ... | ... | 41 |
| மாய மரம் | ராஜி | ... | 43 |
| கலைத் தேவி கைங்கரியம் | ... | ... | 47 |
| ஈயைக் கொல்ல மருந்து ! | ராஜம் | ... | 47 |
| அனுதாபக் கடிதம் | ஏ. கே. பட்டுசாமி | ... | 48 |
| இரகசிய ஆயுதம் | ஆ. ரங்கநாதன் | ... | 50 |
| சந்திரஹாரம் | பிரேம்சந்த் | ... | 51 |

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 35

# என்ன சேதி?

## சத்தியமூர்த்தி தினம்

இம் மாதம் 28-ம் தேதி தீரர் சத்தியமூர்த்தி அவர்களின் சிராத்த தினம் வருகிறது. இந்தியாவின் சுதந்திரத்துக்காக வாழ்நாளெல்லாம் சிரத்தையுடன் பாடுபட்டு உயிர் விட்ட தலைவரின் நினைவைக் கொண்டாட வேண்டுமென்றும், அவரிடம் நமது அன்பையும் நன்மதிப்பையும் தெரிவித்துக் கொள்ள வேண்டும் என்றும் ஸ்ரீ காமராஜ நாடார் வேண்டுகோள் விடுத்திருக்கிறார். இதை நாம் மனப்பூர்வமாக ஆதரிக்கிறோம். அன்று தமிழ் நாடெங்கும் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் ஞாபகார்த்தமாகக் கூட்டங்கள் நடைபெறுமென்று எதிர்பார்க்கிறோம்.

## காப்பி போர்டு ஒழிக!

புது டில்லி சர்க்கார் காரியாலயங்களைப் பற்றி இந்திய சட்ட சபையில் பேசிய அஸ்ஸாம் அங்கத்தினர் ஒருவர் மேற்படி காரியாலயங்களில் "எங்கே பார்த்தாலும் மதராஸிகளும் மலையாளிகளும் சுந்தரம்களும் சுவாமிநாதன்களுமாகவே இருக்கின்றனர்!" என்று புகார் சொன்னார். இப்படியாகப் புதுடில்லியில் மதராஸ் கொடியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்கும் நண்பர்களுக்கெல்லாம் ஒரு விஷயம் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம். சமீப காலத்தில் தென்னிந்தியாவில் "ஒழிக!" கோஷங்களும் இயக்கங்களும் பற்பல கிளம்பியதுண்டு. அவற்றில் எல்லாம் அபிப்பிராயபேதமின்றி அநேகமாகத் தென்னிந்தியர் எல்லாரும் ஆமோதிக்கும் கோஷம் "இந்தியக் காப்பி போர்டு ஒழிக!" என்னும் கோஷந்தான். இந்தியக் காப்பி போர்டைப்போல் மௌடீகமும் மடத்தன்மையும் மதமதப்பும் மக்களின் கஷ்டத்தை உணர முடியாத எருமை மாட்டு சுபாவமும் உள்ள ஒரு ஸ்தாபனம் வேறு இருக்க முடியாது என்று இங்கு எல்லோரும் ஒருமுகமாகக் கருதுகிறார்கள். ஒவ்வொரு நாளும் பொழுது விடிந்தவுடனே "இந்தியக் காப்பி போர்டு அடியோடு ஒழிக!" என்று ஒரு தடவை கோஷித்துவிட்டுத்தான் மற்றக் காரியங்களைப் பார்க்கிறார்கள். தென்னிந்தியர்களின் மேற்படி ஒருமுகமான விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதற்கு உதவி புரியுமாறு புது டில்லியில் உள்ள சாமிநாதர்கள், சுந்தரம்கள், வெங்கட்ராமர்கள், சுப்பிரமண்யர்கள், சண்முகர்கள், சந்தானங்கள், அனந்தசயனங்கள், நாயர்கள், மேனர்கள் ஆகியவர்களை மரியாதையாகக் கேட்டுக் கொள்கிறோம்.

## நல்ல காரியமே!

ஒரு ஸ்தாபனத்திற்குள் இருந்து கொண்டே உள்ளூற அதற்கு விரோதமான காரியங்களைச் செய்வதைக் காட்டிலும், அதிலிருந்து வெளியேறி நேர்மையான முறையில் அதன் குற்றம் குறைகளை எடுத்துக் காட்டுவது நல்ல முறையல்லவா? இதன்படி பார்க்கப் போனால் இந்திய ஸோஷலிஸ்ட் கட்சியினர் காங்கிரஸிலிருந்து வெளியேறுவதென்று முடிவு செய்திருப்பது ரொம்ப நல்ல காரியந்தான்.

ஜனநாயக முறைப்படி காங்கிரசுக்கு எதிர்க்கட்சி என்று ஒன்று இருக்க வேண்டியது அவசியமென்றும், அத்தகைய கட்சியினர் தேசபக்தியுடையவர்களாக இருக்க வேண்டுமென்றும், எதிர்க்கட்சி ஸ்தானத்தில் இருப்பதே தங்களுடைய நோக்கமென்றும் சோஷலிஸ்டுகள் கூறுகின்றனர். இந்தியா சுதந்திரம் பெற்று இன்னும் ஒரு வருஷங்கூட ஆகவில்லை. புதிதாக ஏற்பட்ட சுதந்திர சர்க்காருக்கு ஒரு வருஷம்கூட அவகாசம் அளிக்காமல், "இதைச் சாதிக்கவில்லை; அதைச் சாதிக்கவில்லை" என்று சொல்லுவது நியாயமாகாது. இருந்தாலும் காங்கிரசுக்கு உள்ளேயே இருந்து கொண்டு காங்கிரசைக் கண்டிப்பது சரியல்ல என்பதை உணர்ந்து சோஷலிஸ்டுகள் வெளியேறியிருப்பதில் தவறு எதுவுமில்லை.

# காப்பி விவசாயியும் காப்பி போர்டும்

பட்டிவீரன்பட்டி: மதுரை
29—3—48.

காப்பிக்கொட்டை விஷயமாகச் சென்ற பல மாதங்களாகப் பொது மக்களிடையேயும், பத்திரிகைகளிலும் பிரசுரிக்கப்பட்டு வரும் விஷயங்களைப்பற்றிக் காப்பி விவசாயி என்ற முறையில் சில உண்மைகளை எடுத்துக் கூற விரும்புகிறேன். அதிலும் முக்கியமாக, 14-3—48ம் தேதி கல்கியில் "பாதிக் கிணறு தாண்டினால்?" என்ற தலைப்பில் பிரசுரிக்கப் பட்டிருக்கும் விஷயமானது வரவேற்கக் கூடியதுதான். இருந்தாலும் உண்மை நிலைமையைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

காப்பி போர்டானது இரண்டாவது மகா யுத்தத்தின்போது வைஸ்ராய் பிரபுவின் அவசரச் சட்டத்தின்கீழ் உண்டுபண்ணப்பட்ட ஒரு சங்கமாகும். மேற்படி சங்கத்தில் அரசாங்க உத்தியோகஸ்தர்கள், காப்பி வியாபாரிகள், காப்பி விவசாயிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது தேர்ந்தெடுக்கப்பட்டதாகச் சொல்லிக்கொள்ளும் விவசாயிகளும் சிலர் இருக்கின்றனர்.

பொது ஜனங்களிடையே காப்பிக் கொட்டை விற்பனையில் வரும் முழுத் தொகையும் காப்பிக்கொட்டை விவசாயிகளுக்கே போய்ச் சேருவதாக இருந்து வரும் அபிப்பிராயம் தப்பிதமானது. காப்பிக் கொட்டை விவசாயிக்கு மிக உயர்ந்த ரகக் காப்பிக் கொட்டைக்கு மணு ஒன்றுக்கு ரூபாய் 23-தான் கிடைக்கின்றது. ஆனால், உபயோகிப்பவர்கள் மணு ஒன்றுக்கு இதைப் போல் இரட்டிப்பான விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. இடையே உள்ள கொள்ளை லாபமானது முக்கியமாக வியாபாரிகளுக்கும் இந்தியக் காப்பி போர்டாரின் உத்தியோகஸ்தர்களுடைய சம்பளத்திற்குமாகப் போய்ச் சேர்ந்து விடுகிறது.

பொது ஜனங்களிடையே காப்பி விவசாயிகள் எல்லோரும் முதலாளிகள் என்ற தப்பான அபிப்பிராயம் இருந்து வருகின்றது. வாஸ்தவத்தில் 100-க்கு 20-பேர் சிறிய தோட்டங்களை உடைய ஏழை விவசாயிகள் தான். மனித சஞ்சாரமற்ற மலைப் பிரதேசங்களிலே கட்டை வண்டிகள்கூடப் போக முடியாத நிலைமையிலே மலேரியா என்ற விஷஜுரத்தினால் பாதிக்கப்பட்டு அட்டைக் கடியால் அவதியுற்றுத் தனக்கும் தன்னுடைய குடும்பத்தாருக்கும் வேண்டிய உணவுப் பொருள்களை மலைப் பிரதேசத்தின் செங்குத்தான வழியில் தோள்மேல் தூக்கிச் செல்லும் ஏழை விவசாயிகளின் நிலைமையைப் பற்றி யோசித்துப் பார்க்கவேண்டும். 1935—36ல மணு ஒன்றுக்கு 7 ரூபாய்க்குக் காப்பிக் கொட்டையை விற்றார்கள். அன்று காப்பிக் கொட்டை விவசாயிகளின் நிலைமை எப்படியிருந்ததென்று யோசித்துப்பார்க்கவேண்டும். காப்பி விவசாயிகள் எல்லோரும் அன்று அளவிற்கு மீறிய கடனிலிருந்தார்கள். தங்களுடைய நிலங்களை அடமானம் வைத்தவர்கள் பலர். தங்கள் நிலபுலன்களை விற்றுக் கடன் அடைத்தவர்கள் சிலர். காப்பிவிலை உயர்வினால் ஏற்பட்ட லாபத்தை இன்னும் காப்பி விவசாயிகள் அடையவில்லை. இவ்வளவு விலை உயர்வுக்குப் பின்னும் விவசாயியின் நிலைமை ஒரு அளவு சீர்திருந்தியதே ஒழிய முற்றிலும் சீர்திருந்தவில்லை, பழைய கருப்பனே கருப்பன் என்ற நிலைமைதான். அதுமாத்திரமல்ல. சென்ற மூன்று ஆண்டுகளாக இந்தியன் காப்பி போர்டாரால் கையாளப்பட்டு வரும் விற்பனை முறையானது விவசாயிகளின் வயிற்றில் மண்ணை அடித்துக் காப்பி வியாபாரிகளுக்கும் கள்ளமார்க்கட் காரர்களுக்கும் கொள்ளை லாபத்தைச் சம்பாதித்துக் கொடுத்தது.

எனவே இந்த அதிகப் படியான விலை உயர்வுக்கு மூலகாரணம் இந்தியன் காப்பி போர்டார்தான் என்பதைப் பொது ஜனங்கள் உணர வேண்டுமென்று பெரிதும் ஆசைப்படுகிறேன். காப்பி போர்டானது என்றைய தினம் எடுக்கப்படுகின்றதோ அன்றுதான் விவசாயிகளுக்கும் பொது மக்களுக்கும் நன்மை பிறக்கும் என்பதை மிகவும் வணக்கத்துடன் தெரியப்படுத்திக் கொள்ளுகின்றேன். நா. இல்லைக்கோவிந்தன்.

---

## செய்ய வேண்டியதென்ன?

காங்கிரஸ் வாதிகளுக்கும் சோஷலிஸ்டுகளுக்கும் கொள்கையில் வேற்றுமை எதுவுமில்லை. இந்தியாவின் வருங்கால அரசியல் ஜனநாயக சமதர்மக் குடியரசாக இருக்க வேண்டுமென்று காங்கிரஸ் தலைவர்கள் முடிவு செய்திருப்பதே அதற்குத் தகுந்த சான்றாகும். இந்திய ஜனங்களுக்கு எவ்விதத்திலும் நன்மை செய்ய வேண்டும் என்பதே காங்கிரஸின் கொள்கையும் நோக்கமுமாகும். சோஷலிஸ்டுகளின் நோக்கமும் அதுதான்.

சோஷலிஸ்டு கட்சியில் தியாகிகளும், திறமைசாலிகளும், சிறந்த தேச பக்தர்களும் இருக்கிறார்கள். அவர்கள் இனி தனிக்கட்சியினராக இருந்தாலும், காங்கிரஸுக்கு விரோதமாக எதுவும் செய்யமாட்டார்கள் என்று நம்புகிறோம்.

"காங்கிரஸைக் கண்டிப்பதால் சோஷலிஸ்டுகளுக்குப் பொது ஜனங்களின் ஆதரவு கிடைத்து விடாது. சோஷலிஸ்டுகளின் கொள்கைகளையும் தொண்டையும் அடிப்படையாகக் கொண்டே அவர்களைப் பொது ஜனங்கள் மதிப்பிடுவார்கள்" என்று மேற்படி கட்சி மகாநாட்டுத் தலைவர் வற்புறுத்தியிருப்பதைப் பின்பற்றி நடப்பார்களாயின் அவர்களுக்கும் காங்கிரஸுக்கும் தேசத்துக்கும் நன்மையே.

## குழந்தையும் கடிக்கிறது!

பாகிஸ்தான் கவர்னர் ஜெனரல் ஜின்னா கிழக்கு வங்காளத்துக்கு விஜயம் செய்திருக்கிறார். கிழக்கு வங்காளத்தில் "உருதுவை அரசாங்க பாஷையாக்கக்கூடாது; வங்காளிதான் அரசாங்க பாஷையாக இருக்க வேண்டும்" என்று பெரும் கிளர்ச்சி நடந்து வருகிறது.




## ஐரோப்பா- வல்லரசுகளின் புதுக் காதல்

செக்கோஸ்லோவோகியாவுக்குப் பிறகு இப்போது பின்லாந்தைத் தன் ஆதிக்கத்தில் கொண்டு வர ருஷ்யா நடவடிக்கை எடுத்து வருகிறது.






# ஒரு பொறிதான் பாக்கி!

அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் தீவிரமாக முனைந்துவிட்டார்!

உலக சமாதானம் என்ற பேர்வழி எந்த உலகத்தில் போய் ஒளிந்துகொண்டிருந்தாலும் அவரை ட்ரூமன் விடப்போவதில்லை; பின்னைப் பிடித்து இழுத்துப் பூலோகத்துக்குக் கொண்டு வந்தபின்தான் அவர் மறு காரியம் பார்க்கப் போகிறார்!

அதற்காக ட்ரூமன் போட்டுள்ள திட்டங்கள் பிரமாதமானவை.

எனவே, இதற்கு முன் பல தடவைகளிலும் உலகத்தை ஏமாற்றுவதில் வெற்றி பெற்ற ஸ்ரீமான் உலக சமாதானம் இந்தத் தடவை வெற்றி பெறுவாரா என்பது சந்தேகம்தான்!

உலக சமாதானத்தைக் கொண்டு வருவதற்காக அமெரிக்க ஜனாதிபதி கையாளப் போகும் முறைகள் என்னவென்பதைப் பார்ப்போம்.

1. குறிப்பிட்ட ஐரோப்பிய நாடுகளுக்கு அமெரிக்கா கோடிக்கணக்கான டாலரும், கப்பல் கப்பலாக யுத்த தளவாடங்களும் யந்திர சாதனங்களும் கொடுத்து உதவ வேண்டுமாம்.

2. அமெரிக்கா முழுதும் கட்டாய ராணுவ சேவையையும் ராணுவப் பயிற்சி முறையையும் சிறிதும் தாமதமின்றி உடனே அமுலுக்குக் கொண்டு வர வேண்டுமாம்.

இதெல்லாம் எதற்காக? யுத்தம் வராமல் தடுத்து உலகில் சமாதானத்தை உண்டு பண்ணுவதற்காகவே என்று ட்ரூமன் சொல்லுகிறார்!

ஐரோப்பாவில் நிலைமை மிகவும் நெருக்கடியான கட்டத்துக்கு வந்துவிட்டதென்றும், இன்னும் சில வாரங்களில் நிலைமை முழு மோசமாகி விடுமென்றும் ட்ரூமன் உள்பட அமெரிக்க ராஜதந்திரிகள் கூறி வருகிறார்கள்.

அடுத்த மகாயுத்தமானது அதிக தூரத்தில் இல்லை என்று அமெரிக்க வெளிநாட்டு விவகாரக் கமிட்டியின் தலைவரான சார்லஸ் ஈடன் கருதுகிறார்.

பிரிட்டன், பிரான்ஸ், நெதர்லண்ட்ஸ், பெல்ஜியம், லக்ஸம்பர்க் முதலிய நாடுகள் ஐம்பது வருஷ உடன்படிக்கை யொன்று செய்து கொண்டிருக்கின்றன.

பொருளாதாரத் துறையில் பரஸ்பரம் ஒத்துழைக்க வேண்டியதுடன், ராணுவ உதவியும் அளிக்க வேண்டும் என்பதே உடன்படிக்கையின் சாரம்.

மேற்படி நாடுகளுடன் அமெரிக்காவும் ராணுவ ஒப்பந்தம் செய்துகொள்ளப் போகிறதாம்.

இவ்வாறாக, மற்றொரு மகாயுத்தத்துக்குப் பூர்வாங்கமான நடவடிக்கைகள் எல்லாம் வெகு ஜரூராக நடைபெற்று வருகின்றன.

* * *

சென்ற மகா யுத்தம் முடிந்தபின் ருஷ்யாவை மறைமுகமாகக் கண்டித்து வந்த அமெரிக்காவும் பிரிட்டனும் இப்போது பகிரங்கமாகக் கண்டிக்க ஆரம்பித்திருக்கின்றன.

அமெரிக்க ஜனப் பிரதிநிதிகள் அடங்கிய சபையில் ட்ரூமன் கடைசியாக நிகழ்த்தியுள்ள பிரசங்கத்தில், ருஷ்யாவும் பொது உடைமையும் ஜனநாயகத்தின் ஜன்ம விரோதிகள் என்றும், இனி பொது உடைமைக் கொள்கையின் ஆக்கிரமிப்புக்கு அணுவளவும் இடம் கொடுக்கப் போவதில்லை என்றும் பட்டவர்த்தனமாகக் கண்டித்திருக்கிறார்.

காரியம் மிஞ்சிப் போகும் வரையில் ஹிட்லரிடம் பொறுமை காட்டியதைப் போல், ருஷ்யாவிடம் பொறுமை காட்டப் போவதில்லை யென்றும் அமெரிக்க ஜனாதிபதி எச்சரித்திருக்கிறார்.

அதாவது ருஷ்யாவின் பலம் அதிகமாவதற்கு முன் அதன் பலத்தைச் சோதித்துவிட அமெரிக்கா தீர்மானித்திருக்கிறது என்பதே ட்ரூமன் விடுத்துள்ள எச்சரிக்கையின் அந்தரங்கமாகும்.

அமெரிக்காவில் அணுகுண்டுகளின் உற்பத்தி நாளுக்கு நாள் பெருகி வருவதாகப் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன.

அணுகுண்டு உற்பத்தியில் ருஷ்யா இன்னும் வெற்றி பெறவில்லை யென்றும் அதே செய்திகள் கூறுகின்றன.

ஆனால் சமீபத்தில் ருஷ்யாவின் வெளிநாட்டு மந்திரி பேசியபோது, அணுகுண்டு உற்பத்தி ரகசியம் அமெரிக்காவின் ஏகபோக பாத்தியமாக இருந்த காலம் மலையேறி விட்டதென்று குறிப்பிட்டிருக்கிறார்.

அணுகுண்டு ரகசியம் ருஷ்யாவுக்குத் தெரிந்துவிட்டதென்பதை அமெரிக்கப் பிரமுகர்களில் சிலர் சில மாதங்களுக்கு முன்பே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

எனவே, அணுகுண்டு உற்பத்தி ருஷ்யாவில் பெருகு முன் அந்த தேசத்தை ஒரு கை பார்த்து அடக்கிவிட வேண்டும் என்பது அமெரிக்காவின் உத்தேசமாக இருக்கலாம்.

* * *

வல்லரசுகளின் அந்தரங்க சுத்தியின்மையையும் ஆதிக்கப் போட்டியையும் பற்றி ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறோம்.

வல்லரசுகளுக்கு ஆதிக்கம் செலுத்துவதுதான் முக்கியமே யல்லாமல் கொள்கை முக்கியமல்ல என்பது சமீபத்தில் நிகழ்ந்த ஒரு சம்பவத்திலிருந்து இன்னும் வியக்தமாகத் தெரிந்திருக்கிறது.

பாலஸ்தீனத்தைப் பிரிக்கக் கூடாதென்று ஆகிய நாடுகளும் முஸ்லிம் நாடுகளும் எவ்வளவோ வற்புறுத்தியும், அமெரிக்கா முதலில் அதற்குச் செவி மடுக்கவில்லை.

“எது எப்படியாயினும் பாலஸ்தீனப் பிரிவினையை நிறைவேற்றியே தீருவோம்” என்று அமெரிக்க சர்க்கார் பிரதிநிதிகள் வீம்பு பேசினர்.

ஆனால் மேற்படி பிரிவினை தங்களுடைய சுய நலத்துக்கும் ஆதிக்க நோக்கத்துக்கும் முரணாக இருக்கிறதென்பது தெரிந்ததும், அவ் விஷயமாக ஒரு சில மாதங்களுக்குள் வெட்கமின்றித் தங்களுடைய போக்கையே மாற்றிக்கொண்டு விட்டனர்!

மற்றும் ஜப்பானுக்கு ஜனநாயகத்தைப் போதிக்கப் போவதாகக் கூறிக்கொண்டு ஜப்பானை ஆக்கிரமித்த அமெரிக்கர்களின் தலைமையில், ஜப்பான் இன்னும் ஓரடிகூட ஜனநாயகப் பாதையில் முன்னேறியதாகத் தெரியவில்லை.

யுத்தம் முடிந்து இரண்டு வருஷங்களுக்கு மேலாகியும், ஜப்பானில் ஜெனரல் மெக் ஆர்தர் நடத்தி வரும் பள்ளிக்கூடம் இன்னும் முடிந்தபாடில்லை!

ஜப்பானியருக்குக் கடவுளாக இருந்து வந்த ஜப்பானிய சக்கரவர்த்தியின் ஸ்தானத்தில் இப்போது ஜெனரல் மெக் ஆர்தர் வீற்றிருப்பதாயும், ஜப்பானில் மந்திரி சபையை ஆக்கும் சக்தியும் அழிக்கும் சக்தியும் மெக் ஆர்தருக்கு இருந்து வருவதாயும் சில அமெரிக்கப் பிரமுகர்களே கண்டிக்க முற்பட்டிருக்கிறார்கள்.

அதாவது ஜப்பானில் அமெரிக்காவின் ஆதிக்க ஆசை இன்னும் தீரவில்லை!

* * *

ஐரோப்பாவில் அமெரிக்காவின் ஆதிக்கம் வலுத்துவிடுமோ என்பது ருஷ்யாவின் பீதி. அங்கு ருஷ்யாவின் ஆதிக்கம் ஏற்பட்டு விடுமோ என்பது அமெரிக்காவின் கவலை.

இந்த நிலைமையில் எந்த வல்லரசு ஜனநாயகத்தின் விரோதி, எது விரோதியல்ல என்று கூற முடியும்?

ஐரோப்பிய நாடுகளின் தலைவிதியை அமெரிக்காவோ அல்லது ருஷ்யாவோ நிர்ணயிக்க முற்படாமல், அந்தந்த தேச ஜனங்கள் நிர்ணயித்துக் கொண்டுவிட்டாலொழிய உலக சமாதானத்துக்கு வழியில்லை.

முதலாவது மகா யுத்தம் நடந்த இருபது வருஷங்களுக்குப் பிறகுதான் இரண்டாவது மகா யுத்தம் ஆரம்பமாயிற்று.

ஆனால் இரண்டாவது மகாயுத்தம் நடந்த இரண்டு வருஷங்களுக்குள்ளேயே நிலைமை இவ்வளவு மோசமாகி விட்டது!

வல்லரசுகளின் ஆதிக்கப் போட்டி மானிட வர்க்கத்துக்கே ஒரு சனியனாக வந்திருக்கிறது என்பதையே இன்றைய சம்பவங்கள் காட்டுகின்றன.

* * *

முதலாவது உலக மகா யுத்தம், யுத்தம் என்பதையே உலகத்திலிருந்து ஒழிக்கப் போகும் யுத்தம் என்று வர்ணிக்கப்பட்டது.

இரண்டாவது மகா யுத்தமும் அவ்வாறே வர்ணிக்கப்பட்டது.

இப்போதும் யுத்தம் வராமல் தடுக்கவே அமெரிக்கா பூரண யுத்த கோலத்துடன் இருந்து வரவேண்டும் என்று ட்ரூமன் கூறுகிறார்!

எனவே இன்றைய சர்வதேச அரசியல் நிலைமையானது ஒரு பெரும் மருந்துக் குவியலைப்போல் இருந்து வருகிறது.

அது குபீரென்று பற்றிக்கொள்ள ஒரே ஒரு பொறிதான் பாக்கி!

# தெய்வத்தின் சோதனையோ!

1 அரிசி கிடைக்காத காலத்திலே — நாம்
அகப்பட்ட கோதுமை சோளத்தையும்
பெரிசாக எண்ணியே வாங்கிவந்து — நம்
பெருமை குலையாமே வாழ்ந்துப் பிட்டோம்.

2 கட்டத் துணியில்லாக் காலத்திலே — கண்ட
கர்டாத் துணிக்கெல்லாம் சாய மேத்தி
பட்டாகக் கட்டிப் பகட்டி நின்னு — நாம்
பவுசு குறையாமல் வாழ்ந்துப் பிட்டோம்.

3 பாலு கிடைக்காத காலத்திலே — ஏதோ
பவுடரை வாங்கிக் கொதிக்க வைச்சு
நாலுபேர் வந்தாலும் காப்பிதந்து — அதை
நல்லா யிருக்குன்னும் சொல்ல வைச்சோம்!

4 சக்கரை இல்லாத காலத்திலே — நாம்
சலிக்காமல் பனைவெல்லம் கரைச்சு விட்டு
தக்கவர் வந்தாலும் காப்பிபோட்டு — முதல்
தரமா யிருக்குன்னு சொல்ல வைச்சோம்.

5 காப்பிப் பொடிக்கொரு பஞ்சமாமே — அதில்
கள்ளத்தனம் மோசம் மிஞ்சுதாமே!
மாத்துப் பொருளிந்த காப்பிக்குண்டோ — அம்மா
மானமாய் வாழ வழியு முண்டோ?

6 நேற்று முதற்கொண்டு காப்பியில்லை — விடு
நிர்த்தூளி பட்டுத்தான் போகுதடி!
பார்க்கப் பிடிக்கல்லே பசங்களையே — அவர்
பாய்ந்து பாய்ந்து என்னை அடிக்கவறார்!

7 காலை எழுந்ததும் காப்பியுடன் — அவர்
கண்ணிலே பட்டால் புண்ணியமாம்!
சேலைநகை மற்றதேதும் கேட்டால் — அவர்
சிரித்துக் கொண்டே பணம் கொடுத்திடுவார்!

8 வீட்டிலே காரியம் ஓடவில்லை — அவர்
வேலைக்குப் போகவும் சுணங்குகிறார்
பாட்டுக் கதையின்னு கூத்தடிக்கும் — எங்கள்
பட்டக்கா கூடச் சோர்ந்து விட்டான்!

9 ஒத்த குடித்தனம் என்றுசொல்லி — இந்த
ஊராரும் மெச்சவே வாழ்ந்திருந்தேன்
அத்தனையும் இப்போ பாழாச்சு — எந்த
ஆகாத தெய்வத்தின் சோதனையோ?

10 ஆழாக்கு காப்பிப் பொடி கொடுத்தால் — உன்னை
ஆயிரங் காலம்தான் வாழ்த்திடுவேன்!
கூழுக்குப் பஞ்சம் வந்தாலும் — இங்கே
கூடாது காப்பிக்குப் பஞ்சம் அம்மா!

— காட்டூர் கண்ணன்.

லக்ஷக்கணக்கான ரஸிகர்களின்
சௌகரியத்தை முன்னிட்டு
பல நகரங்களில் ஒன்றுக்கு
மேற்பட்ட பல தியேட்டர்களில்
ஏக காலத்தில் திரையிட
ஏற்பாடாகிவருகிறது

# சந்திரலேகா

...ஜெமினியின் அற்புத சிருஷ்டி...

..... ஏப்ரல் 9உ வெளிவருகிறது ...




ராயல் சைஸ்
9½" × 6½"
[Rayal octovo]
100 பக்கங்கள்

உள் நாடு
தனிப் பிரதி அணு 8
வருட சந்தா ரூ. 6

வெளி நாடு
தனிப் பிரதி அணு 10
வருட சந்தா ரூ. 7½

இனிய சிறு கதைகள்
அரிய கவிதை மலர்கள்
சிறந்த கலைக் கட்டுரைகள்
உயர்தர விமர்சனங்கள்
பரிசு பெற்ற புகைப் படங்கள்
கண்ணைக் கவரும் வர்ணச் சித்திரங்கள்
இன்னும் பல சிறந்த பகுதிகள்

# அமுதசுரபி

தமிழ் இலக்கிய மாதப் பத்திரிகை

மூவர்ணப் பட அட்டையைத் தாங்கி வெளிவரும்

இப்பத்திரிகையில் தொடர்ந்து எழுதும் பெரியோர்களுள் சிலர் :

திரு. ரா. பி. சேதுப் பிள்ளை
,, சுத்தானந்த பாரதியார்
,, வி. கலியாணசுந்தர முதலியார்
,, கி. வா. ஜகந்நாதன்
,, கே. ஏ. பி. விசுவநாதம்
,, எம். எஸ். சுப்பிரமணிய ஐயர்
,, Capt. என். சேஷாத்திரிநாதன்
,, சி. என். அண்ணாதுரை
,, ரா. ஸ்ரீ தேசிகன்
,, ச. கு. கணபதி ஐயர்

திரு. 'அகிலன்'
,, ஜி. எஸ். மணி
,, கா. ஸ்ரீ. ஸ்ரீ.
,, ரா. ஆறுமுகம்
,, "கலி"
,, நாரண துரைக்கண்ணன்
,, பெ. நா. அப்புஸாமி
,, கே. வி. வி. பழம் நீ
,, ராஜ சூடாமணி
,, ல. ச. ராமாமிருதம்

முதல் இதழ் ஏப்ரல் 1-ம் தேதி

ஏஜன்ஸி சேராத இடங்களுக்கு முந்திக் கொள்ளுங்கள்.

---

விவரங்களுக்கு :

'அமுதசுரபி' 7, சுங்குராம செட்டித் தெரு, சென்னை 1.




இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இந்தியாவின் கடற்கரையிலிருந்து பல கப்பல்கள் பல திக்குகளுக்குச் சென்று கொண்டிருந்தன. சொந்தக் கப்பல்களில் மக்கள் கடல் கடந்து வெளி நாடுகளுக்குச் சென்று வியாபாரம் செய்து வந்தார்கள். வேறு சிலர் வெளி நாடுகளுக்குச் சென்று குடியேறினார்கள். நம் நாட்டின் விலையுயர்ந்த பொருள்களெல்லாம் பல நாடுகளுக்கு அனுப்பப்பட்டு விற்கப்பட்டன. தமிழ் மன்னர்களும், ஆந்திர அரசர்களும் பர்மா, ஜாவா, சுமத்ரா, போர்னியோ, சைனா போன்ற நாடுகளுக்குத் தம் சொந்தக் கப்பல்களை யனுப்பி இந்திய நாகரிகத்தையும் கலையையும் பரப்பினார்கள். எல்லையற்ற கடலில் ஓடிய நம் கப்பல்களெல்லாம் மரத்தினாலேயே செய்யப்பட்டவை. எனவே, கப்பல்களுக்கு மரக்கலங்கள் என்று பெயர் வந்தது.

தேம்ஸ் நதியில் நம் மரக்கலங்கள் நின்றபொழுது, கப்பல் கட்டும் தொழிலில் பிரசித்திபெற்ற பிரிட்டிஷார்கள் மூக்கில் விரல் வைத்து ஆச்சரியப் பட்டார்கள். இந்த ஆச்சரியம் பொறாமையிலும் ஆத்திரத்திலும் அவர்களைக் கொண்டுபோய் விட்டது. ஆங்கிலேயர்கள் இந்தியா வந்ததும் இந்தியாவின் கப்பல் தொழில் ஒடுங்க ஆரம்பித்து விட்டது. ஆனால் தமிழ் நூல்களும், சரித்திர ஆசிரியர்களும், நம் ஆலயங்களிலுள்ள சித்திரங்களும் நம் பண்டைக் காலச் சிறப்பை நமக்கு ஞாபக மூட்டிக்கொண்டு வந்தன. அந்தப் பூர்வ ஞாபகங்களின் காரணமாகவே தூத்துக்குடி தேசபக்தர் திரு வ. உ. சிதம்பரம் பிள்ளை துணிவுடன் கப்பல் ஓட்ட முன் வந்தார். ஆனால் அன்னிய அரசாங்கம் அதைத் தேசத் துரோகமாகக் கருதியது.

கப்பல் ஓட்டும் துறையில் மற்றொரு முயற்சி பம்பாயில் ஸிந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியினால் ஆரம்பிக்கப்பட்டது. இந்தக் கம்பெனி 1919-வது ஆண்டில் ஸ்தாபிக்கப்பட்டது. சொந்தக் கப்பல்கள் கட்டி ஓட்டுவதே கம்பெனியின் நோக்கம். ஆனால் பல இடையூறுகளுக்கும் எதிர்ப்புக்கு மிடையில், கம்பெனியால் ஒன்றும் சாதிக்க முடியவில்லை. இந்திய சட்டசபையில் ஜனப் பிரதிநிதிகள் வாதாடியது அன்னிய சர்க்காரிடம் பலிக்கவில்லை. இருந்தாலும் நஷ்டத்தைப் பாராமல் சிறிய கப்பல்கள் கட்டி ஐரோப்பாவுக்கு அனுப்பி வந்தார்கள். 1919-வது ஆண்டு ஏப்ரல் மாதம் 5-ந் தேதி சென்ற முதல் கப்பலுக்கு மகாத்மா காந்தி ஆசிச் செய்தி யனுப்பினார். சொந்த நாட்டில் கப்பல் தொழிலை அபிவிருத்தி செய்யமுடியாத ஸிந்தியா கம்பெனியார் கிளாஸ்கோ

வில் கப்பல் கட்டத் தொடங்கினார்கள். பண்டித மோதிலால் நேரு 1929-வது ஆண்டில், கிளாஸ்கோ கடல் கரையிலிருந்து 'ஜல தூது' என்ற 8000 டன் நிறையுள்ள கப்பலொன்றைக் கடலில் மிதக்கவிட்டார்.

**ப**ல முயற்சிகள் செய்து, இறுதியில் விசாகப்பட்டினத்தின் அற்புதமான இயற்கை வசதிகளைக் கண்டு முப்பதடி தண்ணீர் ஆழத்துடன் கூடிய ஐம்பத்தைந்து ஏக்கர் நிலத்தையும் கப்பல் கட்டுவதற்கு வேண்டிய மற்ற வசதிகளையும் பெற்றார்கள் சிந்தியா கம்பெனியார். 1940-ல் விசாகப்பட்டினம் வந்த சிந்தியா கம்பெனியார் யுத்த நிலைமையையும் பொருட்படுத்தாமல் பெரிய கப்பல்கள் கட்ட ஏற்பாடு செய்தார்கள். 1941 ஜூன் மாதம் 21உ நம் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத் அஸ்திவாரக் கல் நாட்டினார். அன்றைய நிலைமையிலும் தீர்க்கதரிசியாக அவர் பேசினார்: "இன்றைய தினம் எங்கள் அனுதாபத்தையும் ஆசீர்வாதத்தையும் விட வேறு உதவி ஒன்றும் உங்களுக்கு செய்ய முடியாமலிருக்கலாம்; ஆனால் உங்கள் ஏமாற்றங்களுக்கு ஆறுதல் உண்டு. நாளை வரும் நாள் கட்டாயம் பிரகாசமான நாளாக இருக்கும். மக்கள் எழுச்சி அடைவார்கள்" என்ற பொன் மொழிகளே சிந்தியா கம்பெனிக்கு வேண்டிய பலத்தை யளித்தது.

ஓராண்டுக்கு முன்பு நான் விசாகப்பட்டினத்திலுள்ள சிந்தியா கம்பெனியின் கப்பல் சாலைக்குச் சென்று பார்த்தேன். கப்பலைப் பூர்த்தி செய்வதிலுள்ள கஷ்டங்களை எனக்கு விவரித்தார்கள். இவ்வளவு சீக்கிரத்தில் 8000 டன் நிறையுள்ள ஒரு பெரிய கப்பல் உருவாகிப் புறப்படும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால், எப்படியோ அதற்கு வேண்டிய இரும்பு முதலிய சாமான்களைப் பெற்று ஒரு கப்பலைக் கட்டி முடித்து விட்டார்கள். இன்னொரு கப்பலும் இன்னும் சில மாதங்களுக்குள் விடப்போகிறார்கள். 1949 முடிவுக்குள் மூன்று கப்பல்கள் கட்டி முடிக்கவும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். பண்டைக் காலத்தில் நம் நாட்டில் கட்டப்பட்டவை மரக்கலங்களே. ஆனால் இப்பொழுது கட்டப்பட்ட ஜல உஷாவோ மேல்நாட்டு முறையில் கட்டப்பட்ட இரும்புக் கலம். இந்தியாவில் தயாராகும் இரும்பு சாமான்களாலும், பர்மாவிலும் நம் நாட்டிலும் உற்பத்தியான மரங்களினாலும் செய்யப்பட்டது. பண்டைக் கால நிகழ்ச்சிகளை நினைத்துக்கொண்டு டாக்டர் பட்டாபி சீதாராமையா 'ஏன் மரத்தினாலேயே கப்பல் கட்டக் கூடாது?' என்று மத்திய சட்ட சபையில் கேள்வி கேட்டிருக்கிறார். சிந்தியா கம்பெனியின் வயோதிகத் தலைவர் ஸ்ரீ வால்சந்த் ஹீராசந்த் 'இன்னும் என்ஜின்கள் அயல் நாட்டிலிருந்தே கொண்டு வரப்படுகின்றன' என்று சொல்லி வருந்துகிறார். விரைவில் என்ஜின்களையும் அவரே உற்பத்தி செய்து கப்பல் பூராவையும் நம் நாட்டிலேயே கட்டத் தொடங்கி விடுவார் என்று எதிர்பார்க்கலாம்.



**இ**ந்தியாவின் முதல் கப்பல் கடலில் மிதந்து ஓடப்போவது நம் நாட்டிலேயே ஒரு மகத்தான வைபவம்தான். அதுவும் நம் பிரதம மந்திரியும் ஒப்பற்ற தலைவருமான பண்டித ஜவாஹர்லால் நேருவே கப்பலுக்குப் பெயரிட்

மிதக்க வைப்பது சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவமல்லவா? ஏராளமான ஜனங்கள் இந்த விழாவில் கலந்து கொள்ள இந்தியாவின் பல பாகங்களிலிருந்து விசாகப் பட்டினத்தில் வந்து கூடியிருந்தார்கள். டில்லியிலிருந்து மந்திரி ஸ்ரீ காட்கிலும் மத்திய அரசாங்கக் காரியதரிசிகளும் வந்திருந்தார்கள். இந்தியாவின் முதல் கப்பல், சென்னை மாகாணத்தின் கடலிலே



மிதந்து ஓட ஆரம்பிப்பதை முன்னிட்டு, சென்னைப் பிரதமரும் மற்ற ஒன்பது மந்திரிகளும், தொழிற் காரியதரிசியும், தொழில் கமிஷனரும் சிந்தியா கம்பெனியார் ஏற்பாடு செய்திருந்த ஸ்பெஷல் விமானத்தில் சென்று விழாவில் கலந்துகொண்டோம். ஜெய்ப்பூர் மகாராஜா அரண்மனையில் பண்டித நேருவுடன் சென்னை மந்திரிகள் தங்குவதற்கும், மற்ற விருந்தினர்களின் சாப்பாடு வசதிகளுக்கும் பிரமாதமாக ஏற்பாடுகள் செய்திருந்தனர்.

பிரதம மந்திரி பண்டித நேரு தம் மருமகளுடனும் சிப்பந்திகளுடனும் பதினான்காம் தேதி காலை எட்டு மணிக்கு விமானத்தில் விசாகப்பட்டினம் வந்து சேர்ந்தார். உடனே கப்பல் தொழிற் சாலைக் காலனிக்குச் சென்று அஸ்திவாரக் கல் நாட்டினார். பிறகு ஒன்பது மணிக்குக் கப்பல் ஓட்டும் விழாவுக்கு வந்தார்.

கப்பல் நிறுத்தப்பட்டிருந்த இடத்தைச் சேர்ந்தாற்போல் ஒரு மேடையும் ஒரு கொட்டகையும் நன்கு அலங்கரிக்கப்பட்டிருந்தன. உள்ளூர் நாதஸ்வர வாத்தியம் பொழிந்து கொண்டிருந்தது. விழாவுக்கு விசேஷ அழைப்புப் பெற்றவர்களும், கம்பெனி டைரெக்டர்களும் மேடையில் அமர்ந்திருந்தார்கள். நாலா பக்கங்களிலும் ஒரு லட்சம் ஜனங்களுக்கு மேல் நின்று கொண்டிருந்தனர். பக்கத்திலேயுள்ள ஒரு மலை பூராவும் மனிதத் திரள் உருவமாக அழகுத் தோற்றம் அளித்தது. ஒருபுறத்தில் பிராமணர்கள் வேத கோஷம் செய்தனர். பண்டித நேரு வந்ததும், அவருக்குக் குங்குமத் திலகம் இடப்பட்டது. 'எல்லா உலகங்களிலும் உள்ள தீர்த்தங்கள் உங்களைக் காக்கவேண்டும்' என்னும் பொருள் கொண்ட வேத மந்திரங்களைச் சொன்னார்கள். பிறகு ஸ்ரீ வால்சந்த் ஹீராசந்த் பிரதம மந்திரி ஜவாஹர்லாலைக் கேட்டுக்கொள்ள, அவர் ஒரு தேங்காயுடைத்து, கப்பலுக்கு மாலை சூட்டி, பெயரையும் வைத்தார். அட்சதைகளும், புஷ்பங்களும் எல்லோராலும் சமர்ப்பிக்கப்பட்டன. பலத்த ஆரவாரத்துக்கு மத்தியில் ஜவாஹர்லால் நேரு மேஜைமீதிருந்த ஒரு பித்தானை அழுத்தியதும் புதிய கப்பல் வேகமாய் நகர்ந்து கடலில் இறங்கி ஓடிய காட்சி கண்கொள்ளாக் காட்சி.

பிறகு கம்பெனியின் தலைவர் தம் பிரசங்கத்தைச் செய்தார். பண்டித நேரு பேசுகையில், அரசாங்கமாகிய கப்பலையும் ஜல உஷாவைப் போலவே நன்கு ஓட்டிச் செல்வோமென்ற நம்பிக்கையை நமக்கு அளித்தார்.

நம்முடைய வியாபார வளர்ச்சிக்கும் நம் நாட்டுப் பாதுகாப்புக்கும் கப்பல் தொழில் அபிவிருத்தி இன்றியமையாதது. சுதந்திர இந்தியப் பிரதம மந்திரியால் மிதக்க விடப்பட்ட ஜல உஷா நம் நாட்டின் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையை அங்கே கூடியிருந்த மக்களின் உள்ளங்களில் நன்கு ஊர்ஜிதப் படுத்தியது.

# அன்பு வெற்றி பெற்றது

பாக்கிய சங்கர்

தனியே உட்கார்ந்து கொண்டு காப்பி சாப்பிட்டுக் கொண்டு இருந்தேன். பல நாட்களாகவே எனக்கும் என் கணவருக்கும் இடையே ஒரு பலமான தகர்க்க முடியாத மதில் எழும்பியிருந்து வந்தது. நாங்கள் இருவரும் அடுத்தடுத்த பலகையில் உட்கார்ந்து இருந்தாலும் நான் இந்தியாவிலும் அவர் அமெரிக்காவுக்கு அப்பாலுள்ள அண்டார்டிக் தீவுகளிலும் வசிப்பதுபோல இருக்கும். என் மனம் உடைந்து சோகமும் தளர்ச்சியும் அடைந்திருந்தது. இன்றோ கோபம், அகங்காரம், அவர்மேல் எரிச்சல், — அல்லது வெறுப்போ? — என்ற பலவிதக் கொடிய பைசாசங்கள் என்னைப் பல திக்கிலும் துரடு போட்டு இழுத்துக் கொண்டு நின்றன. துன்பம் தாங்காமல் என் குருநாதர் சொல்லிக் கொடுத்தபடி "வேல் முருகா, வேல் முருகா! வேல்! வேல்!" என்று ஜபித்தேன்.

குழந்தை ஒன்று வந்து என்னைப் பிடித்து அலட்டிக் கொண்டிருந்த பைசாசங்களைத் தன் வேலால் குத்தித் தள்ளிவிட்டு, என் கழுத்தைக் கட்டிக் கொண்டது. என் கடைசிக் குழந்தை என்று தெரிந்ததும் இது வழக்கந்தானே, என்று என் மனம் அசைந்து கொடுக்க மறுத்து விட்டது. திடீரென்று குழந்தை மறைந்து பொக்கைவாய்ச் சிரிப்புடன் ஒரு முகம் என் மனக்கண்முன் தோன்றியது. ஒரு விரலை ஆட்டிக் கொண்டே "அன்பே உலகம்; அன்பே சத்யம்; அஹிம்சையே தவம்; அன்பே வெல்லும்" என்று கருணையுடன் சொன்னது காதில் விழுந்தது. பல முறைகளிலும் சமயம் இருந்தும் அம்மகானை அண்டி உபதேசம் பெறும் பாக்கியமில்லாதவள் நான். இந்த உடலைத் துறந்து ஒரு பிடி சாம்பலாய் உலகமெல்லாம் வியாபித்து, மண்ணோடு மண்ணாய்க் கரைந்து மறைந்த மகாத்மா ஆன்மாவாய் நின்ற நிலையில் என்னைத் தேடி வந்துவிட்டார். "அன்பே உலகம்; அன்பே சத்யம். அன்பே சக்தி; அன்பே வெல்லும்" என்று ஜபித்துக் கொண்டே என்முன் நின்றார். என் குழந்தையின் அன்பினாலோ, முருகப் பெருமான் கருணையினாலோ என்னைக் கொல்லவந்த பைசாசங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன. "அன்பே உலகம்; அன்பே கடவுள்; அன்பே வெல்லும்" என்ற மந்திரத்தை பாபுஜி சிரித்த முகம் மாறாது அன்போடு சொல்லிக் கொண்டே இருந்தார். நானும் உணர்ச்சியற்ற நிலையில் கேட்டுக்கொண்டிருந்தேன்.

* * *

"பானு! எந்தக் கோட்டையைப் பிடிக்க இப்படி யோசனை செய்து கொண்டு இருக்கிறாய்?" என்று கேட்ட வண்ணம் என் தோழி, காசி வந்தாள். நாடகம் கலைந்தது. என் மனம் இதுவரையில் நடந்த நாடகத்திலும் என் அந்தரங்கத் தோழியின் அன்பிலும் சஞ்சரித்தது! "என்னைச் சுற்றியிருக்கும் கோட்டையைத் தகர்க்கத்தான் வழி பார்த்துக் கொண்டு இருந்தேன்" என்றேன். என் முகத்தை உற்றுப் பார்த்த காசி, "இப்படி மனம் உடைந்தால் நன்றாயிருக்குமா? கிணற்றடிக்கு வா, குளிர்ந்த ஜலத்தால் முகத்தைக் கழுவினால் மனத் தெளிவு ஏற்படும். தென்னந் தோப்புக் காற்று உன் மனதின் சோர்வை போக்கும். உனக்குப் பிடித்த அந்த மூன்று பாட்டுகளையும் பாடுகிறேன். மூன்றாவது பாட்டை என்னுடன் சேர்ந்து நீயும் பாடவேண்டும், தெரியுமா?" என்று சொல்லி என்னை அழைத்துச் சென்றாள்.

என் மனக்கண்ணில் மட்டும் மகாத்மாவின் மலர்ந்த முகம் தெரிந்துகொண்டே இருந்தது. அவர் ஏதோ சொல்வதும் இலேசாகக் காதில் விழுந்தது. என் பஞ்ச இந்திரியங்களும் அவர் என்ன சொல்லுகிறார் என்று உன்னிக் கவனித்தன. தெரியவில்லை. தெரிந்திருந்தால் அன்றே நான் புனிதவதியாகி யிருப்பேனே!

* * *

காசியும் நானும் கிணற்றடிக்குச் சென்று குளிர்ந்த ஜலத்தால் முகத்தை அலம்பிக் கொண்டோம். காசி முதல் இரண்டு பாட்டையும் பாடி முடித்து விட்டு மூன்றாவது பாட்டைப் பாடினாள். "ஹரி! தும் ஹரோ ஜனகி பீர" (ஹரி! ஜனங்களின் துயரத்தைப் போக்குவாய்!") என்று ஆரம்பிக்கும் 'மீரா' கீதத்தை, — பாபுஜிக்குப் பிடித்தமான பாட்டை — பாடிக் கொண்டிருந்தாள். என் மனக் கண்முன் தோன்றி என்னைத் தொடர்ந்து வந்து கொண்டிருந்த

பொக்கை வாய்ச் சிரிப்பு மலர்ந்த அந்த அன்பு முகம் பேச வில்லை. மீராவின் மோகன கீதத்தை அசைவற்றுக் கேட்டுக் கொண்டே இருந்தது......

*　　　*　　　*

**வ**ழக்கம்போல் என் கணவர் வீடு திரும்பினார். அவரைப் பார்த்தவுடன் என் தோழி காசி என்னிடம் விடை பெற்றுக் கொண்டாள். நான் அவரை நோக்கிச் சென்றேன். என்னைப் பார்த்தும் பாராதவர் போல வேலை யாளைக் கூப்பிட்டார். (என்னை ஒதுக்கு வதற்காக அவர் கையாளும் வழிகளில் இதுவும் ஒன்று.) தயங்கிக் கொண்டே அவர் முன் சென்றேன். அவர் நான் ஒருத்தி இருப்பதாகவே நினைக்க வில்லை. (இதுவும் இப்பொழுதெல்லாம் எங்கள் இடையே சகஜமாக இருந்து வரும் விஷயம்.) வேலையாள் ஏதோ அவர் இட்ட பணியைச் செய்து விட்டுப் போனான். என் மனக் கண்ணின் முன் தோன்றி எனக்கு ஆதரவு அளித்த பாபுஜி என்னை அழைத்துக் கொண்டு போய் என் கணவரின் முன் மறுபடியும் நிறுத்தினார். என்னையு மறியாது என் கணவருக்கு நமஸ்காரம் செய்தேன். இத னால் பணிந்த தன்மைதானே ஏற்பட முடியும் - இதில் எப்படி வெற்றிக்கு அடிகோல முடியும் என்று கேட்கிறீர் களா?

ஒரு கணம் அவர் ஸ்தம்பித்து நின்றார். ஆனால் ஒரே கணம் தான். மறுகணம் நாடகத்தில் நடக்குமே அது மாதிரி என்னை உதறித் தள்ளிவிட்டுத் தம் அலுவல்களில் ஈடுபட்டார்.

ஆனால், "அன்பே சக்தி: அன்பே வெல்லும்" என்ற மந்திரம் மட்டும் தொடர்ந்து என் காதில் விழுந்து கொண்டே இருந்தது. அவர் போகத் திரும்பிய வேகத்தில் அவர் கால் என் தலையில் பட்டதை என் உள்ளம் அவ மானமாகக் கருத மறுத்தது. பாபுஜி யின் அன்புப் பிடி மட்டும் தளரவில்லை. "இந்த முறை தோல்விதான். ஆனால் உன் வெற்றிக்கு அடிகோலி யாகி விட்டது. அன்பே வெற்றி, வெற்றி பெற நீ மேலும் மேலும் அவர்மேல் அன்பு கொள்ள வேண்டும்" என்று பாபுஜி சொல்லுவது போலிருந்தது. பாபுஜியின் உபதேசம் சுலபமானது அல்ல. ஆனால் அன்று திரௌபதி அலறியபோது கிருஷ்ண பகவான் வெறும் ஆடையைத் தான் கொடுத்தார். இன்றோ நம் தந்தை பாபுஜி தன் இரண்டு கைகளையும் கொடுத்து என்னைப் பற்றி அழைத்துச் செல்லும்போது எனக்குக் கஷ்டமேது! நஷ்டமேது! தோல்வி யேது!

*　　　*　　　*

**இ**தை ஒரு கதையாகக் கேட்டிருந் தால் நான் இப்பொழுது சொல்வதை நம்புவீர்கள். உண்மையை எழுதி யிருப்பதால் ஒருவேளை நம்ப மாட் டீர்கள். கடைசியில் நான் வெற்றி யடைந்தேன். இதோ என் கணவர் என் பின் நின்று இதை யெல்லாம் அன்புடன் வாசித்துக் கொண்டே வந்தவர், "ஆம்! ஆனால் காந்தி மகான் இருந்தபொழுதே இந்த வெற்றியைப் பெற்று அவரிடம் போய்ச் சொல்லிக் கொள்ள நாம் கொடுத்து வைக்கவில்லையே!" என்று ஏக்கம் நிறைந்த குரலில் கூறுகிறார்.

## காந்தி அஞ்சலி



மகாத்மாஜீ, காலஞ்சென்ற ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலேயைத் தம்முடைய 'குரு' என்று அழைப்பது வழக்கம். ஸ்ரீ கோகலே இறக்குறைய நாற்பது வருஷத் துக்கு முன்பே தம்முடைய 'சிஷ்ய'ருடைய மேதையை உணர்ந்து அவரைப் பாராட்டியதைப் படிக்கும்போது, ஸ்ரீ கோகலேயின் மேதையையும் தீர்க்கதரிசனத்தையும் பாராட்டாமலிருக்க முடியாது.

ஸ்ரீ கோகலே கூறியதாவது:

தென்னாப்பிரிக்க சத்தியாக்கிரகப் போராட்டத்தில் ஸ்ரீ காந்தி சாதித்த காரியம் என்றும் அழியாப் புகழ்பெற்று விளங்கும்.

ஸ்ரீ காந்தியை எனக்கு நன்றாகத் தெரியும். வாழ்க்கை யில் எனக்குக் கிடைத்த பல பாக்கியங்களில் அதுவும் ஒன்று.

காந்தியைவிடச் சிறந்த, தூய, மேன்மையான, வீர புருஷன் இதுவரை உலகத்தில் பிறந்ததே இல்லை என்பதை நான் உறுதியாகச் சொல்ல முடியும். அவர் மூலம் இந்திய சமுதாயம் மகோன்னத நிலையை அடைந்து விட்டது.

# அலை ஓசை

## கல்கி



### முதல் அத்தியாயம்

## தபால் சாவடி

சாலையின் இரு புறத்திலும் ஆல மரங்கள் சோலையாக வளர்ந்திருந்தன. ஆதியும் அந்தமும் இல்லாத பரம்பொருளைப் போல் அந்தச் சாலை எங்கே ஆரம்பமாகிறது, எங்கே முடிவாகிறது என்று தெரிந்து கொள்ள முடியாததாயிருந்தது. பகவானுடைய விசுவ ரூபத்தின் அடியும் முடியும் காண முடியாதவாறு போல, இரு திசையிலும் அடர்ந்த மரக் கிளைகளினிடையில் அந்தச் சாலை மறைந்தது.

கிழக்கு மேற்காக வந்த சாலை வட திசையில் திரும்பிய முடுக்கிலே ராஜம்பேட்டைக் கிராமத்தின் தபால் சாவடி எழுந்தருளியிருந்தது. அதன் வாசற் கதவு பூட்டப்பட்டிருந்தது. தூணிலே இரும்புக் கம்பியினால் கட்டித் தொங்க விடப்பட்டிருந்த தபால் பெட்டி திக்கற்ற அநாதையைப் போல் பரிதாபத் தோற்றம் அளித்தது.

சற்றுத் தூரத்தில் ஒரு கட்டை வண்டி 'லொடக்' 'லொடக்' என்ற சத்தத்துடனே சாவகாசமாக அசைந்து ஆடியவண்ணம் போய்க் கொண்டிருந்தது. வண்டிக்காரன் 'அய் அய்' என்று அதட்டி மாடுகளை முடுக்கினான்.

தபால் சாவடிக்கு எதிரே சாலையின் மறு பக்கத்தில் ஒரு மிட்டாய்க் கடை காட்சியளித்தது. கடை வாசலில் அப்போது ஆள் யாரும் இல்லை. உள்ளேயிருந்து 'சொய் சொய்' என்ற சத்தம் மட்டும் கேட்டது. அந்தச் சத்தத்தோடு கடைக்குள்ளிருந்து வந்த வெங்காயத்தின் வாசனையும் சேர்ந்து மிட்டாய்க்கடை ஹரிஹரய்யர் மசால்வடை போட்டுக் கொண்டிருக்கிறார் என்பதை விளம்பரப்படுத்தின.

ஆலமரக் கிளையில் நிர்விசாரமாகக் குடியிருந்த பறவைகள் உல்லாசமாகக் கிரீச்சிட்டுக் கொண்டிருந்தன.

* * *

அதோ 'டக்கு டக்கு' என்ற பாதக்குறட்டின் சத்தம் கேட்கிறது.



வருகிறவர் ஸ்ரீமான் கே. பி. பங்காரு நாயுடு பி. பி. எம். அவர்கள் தான்.

பி. பி. எம். (B. P. M.) என்ருல் ஏதோ சாதாரணமாக நினைத்துவிட வேண்டாம். பிராஞ்சு போஸ்டு மாஸ்டர் என்று அறிந்து கொள்க.

கிராமத்துப் போஸ்டு மாஸ்டருக்குச் சம்பளம் சொற்பந்தான். ஆனல் அவருடைய அதிகாரம் பெரியது. அவருடைய உத்தியோகப் பொறுப்பு அதை விட அதிகமானது.

“ஜில்லா கலெக்டரா யிருக்கட்டும்; ஹிஸ் எக்ஸலென்ஸி கவர்னரே யாகட்டும்; இந்தத் தபால் ஆபீஸுக்குள் அவர்களுடைய அதிகாரம் செல்லாது! இன்னெருவருக்கு வந்த கடிதத்தைக் கொடு என்று கவர்னர் கேட்டாலும், ‘மாட்டேன்’ என்று சொல்ல எனக்கு ரைட் உண்டு!” என்று நாயுடுகாரு பெருமிதத்துடன் அடிக்கடி சொல்லிக் கொள்வார்.

* * *

இதோ அருகில் வந்து விட்டார் போஸ்டு மாஸ்டர் பங்காரு நாயுடு. தபால் சாவடியின் பூட்டில் அவர் திறவுகோலைப் போட்ட உடனே கதவு திறந்து கொள்கிறது.

பங்காரு நாயுடு அவருடைய சாம்ராஜ்யத்துக்குள் பிரவேசிக்கிருர். ஆனல் வாசற்படியைத் தாண்டியதும் மேலே அடிவைக்க முடியாமல் பிரமித்துப்போய் நிற்கிருர்.

தபால்கார பாலகிருஷ்ணன் உள்ளே சாவதானமாக உட்கார்ந்து நேற்று வந்த தபால்களை வரிசைப் படுத்தி வைத்துக் கொண்டிருக்கிருன்.

* * *

போஸ்டு மாஸ்டர் திகைத்து நின்றதைக் கண்ட பாலகிருஷ்ணன், “ஏன் ஸார், இப்படி வெறித்துப் பார்க்கிறீர்கள்! நான் என்ன பேயா, பிசாசா?” என்று கேட்டான்.

“நீ—நீ—வந்து—வந்து ......... எப்படி அப்பா நீ உள்ளே புகுந்தாய்?” என்று பங்காரு நாயுடு தடுமாறிக் கொண்டே கேட்டார்.

“எனக்கு இக்ஷிணி வித்தை தெரியும், ஸார்! கொஞ்ச நாள் நான் பீதாம்பர ஐயரின் சிஷ்யஞ யிருந்தேன். கண் சிமிட்டும் நேரத்தில் இந்தச் சுவருக்குள்ளே நுழைந்து வெளியிலே போய்விடுவேன், ஸார்!”

“உண்மையைச் சொல், அப்பனே! விளையாடாதே!” என்ருர் நாயுடு.

"என்ன ஸார், அப்படிக் கேட்கறீங்க! விளையாடுவதற்கு நான் என்ன பச்சைக் குழந்தையா?"

"போஸ்டாபீஸ் கதவு பூட்டியிருக்கும்போது எப்படி உள்ளே வந்தாய், சொல், அப்பா!"

"கதவு பூட்டி யிருந்ததா, ஸார்! பார்த்தீங்களா, ஸார்!"

"பின்னே? இப்பத்தானே சாவியைப் போட்டுத் திறந்தேன்?"

"சாவியைப் போட்டுப் பூட்டைத் திறந்தீங்க! ஆனால், கதவைத் திறந்தீங்களா என்று கேட்டேன்."

"பூட்டைத் திறந்தால் கதவைத் திறந்த தல்லவா, தம்பி! என்னமோ மர்மமாய்ப் பேசுகிறயே?"

"ஒரு மர்மமும் இல்லீங்க, ஸார்! நேற்று சாயங்காலம் ஒரு வேளை கொஞ்சம் 'மஜா'விலே இருந்தீங்களோ, என்னமோ? நாதாங்கியை இழுத்து மாட்டாமல் பூட்டை மட்டும் பூட்டிக்கிட்டுப் போய் விட்டீங்க!"

போஸ்டு மாஸ்டர் சற்றுத் திகைத்திருந்துவிட்டு, "பாலகிருஷ்ணா! கடவுள் காப்பாற்றினார், பார்த்தாயா? நீ புகுந்தது போலே திருடன், கிருடன் புகுந்திருந்தால் என்ன கதி ஆகிறது!" என்று சொல்லி உச்சி மேட்டை நோக்கிக் கும்பிட்டார்.

"கதி என்ன கதி? அந்தத் திருட்டுப் பயலின் தலைவிதி வெறுங் கை போடே திரும்பிப் போயிருப்பான்! இங்கே என்ன இருக்கிறது திருட்டுப் பசங்களுக்கு? அது போகட்டும், ஸார், தபால் பெட்டியின் சாவியை இப்படிக் கொடுங்க!"

சாவியை வாங்கிக் கொண்டுபோய்ப் பாலகிருஷ்ணன் தபால் பெட்டியைத் திறந்து அதிலிருந்த தபால்களை எடுத்துக்கொண்டு வந்தான். தபால்களின் மேலே ஒட்டியிருந்த தலைகளில் 'டட-டக்' 'டட-டக்' என்று தேதி முத்திரை குத்த ஆரம்பித்தான்.



போஸ்டு மாஸ்டர் ஒரு சிறு தகரப் பெட்டியில் இருந்த தபால் தலைகளை எண்ணிக் கணக்குப் பார்த்துக்கொண்டிருந்தவர், திடீரென்று தலையை நிமிர்த்தி, "ஏனப்பா, பாலகிருஷ்ணா! தேதியைச் சரியாக மாற்றிக் கொண்டாயா?" என்று கேட்டார்.

பாலகிருஷ்ணன் முத்திரை அடிப்பதை நிறுத்தி விட்டு, "என்ன கேட்டீங்க, ஸார்?" என்றான்.

"முத்திரையில் தேதியைச் சரியாய் மாற்றிக் கொண்டாயா என்பதாகக் கேட்டேன்."

"இன்றைக்குத் தேதி பதினைந்து தானே, ஸார்?"

"தேதி பதினைந்தா? நான் சந்தேகப்பட்டது சரிதான்!"

"பின்னே என்ன தேதி, ஸார்!"

"பதினாறு, அப்பா, பதினாறு!"

"கொஞ்சம் உங்கள் எதிரிலே இருக்கிற சுவரிலே பாருங்க, ஸார்!"

பாலகிருஷ்ணன் காட்டிய இடத்தில், தினம் ஒரு தாள் கிழிக்கும் தினகரன் காலெண்டர் மாட்டியிருந்தது. அது 1933-ம் வருஷம் ஜனவரி 15உ என்று காட்டியது.

"அட பரந்தாமா! வருஷத்தைக் கூட இதைப் பார்த்துப் போட்டு விட்டாயோ?"

"பின் எதைப் பார்த்துப் போடுகிறது? காலெண்டர் காட்டுகிற வருஷம் மாதம் தேதிதானே போட்டுத் தொலைக்க வேணும்?"

"அட கேசவா! இது போன வருஷத்துக் காலெண்டர் அல்லவா? வருஷம், தேதி இரண்டும் பிசகு!"

"எல்லாம் சாயங்கால வேளை 'மஜா' செய்கிற வேலைதான்!"

"பாலகிருஷ்ணா! இப்படியெல்லாம் நீ என் மானத்தை வாங்காதே! நான் அந்தக் கடை இருக்கிற பக்கமே போகிறதில்லை; தெரியுமா?"

பங்காரு நாயுடு எழுந்து போய்க் காலெண்டரில் வருஷத்தையும் தேதியையும் மாற்றினார். இப்போது அந்தக் காலெண்டர் 1934-ம் வருஷம் ஜனவரி 16உயைக் காட்டியது.

சாலையில் பெட்டி வண்டி ஒன்று இரு பெரும் ரிஷபங்களால் இழுக்கப்பட்டு ஜம் ஜம் என்று சென்றது.

"பட்டாமணியம் கிட்டாவய்யரின் வண்டி போகிறது, ஸார்!" என்றான் பாலகிருஷ்ணன்.

"ஆமாம்; ஜனவரி மாதம் பதினாறு தேதி ஆகி விட்டது அல்லவா? ஜனவரி வசூலிக்கப் பட்டா மணியம் புறப்படுவது நியாயந்தானே?" என்று



பங்காரு நாயுடுகாரு ஒரு பழைய சிலேட்டையைத் தூக்கிப் போட்டார்.

"ஏன், ஸார்! கிட்டாவய்யர் வீட்டுக் குழந்தைக்கு எப்போது கலியாணமாம், உங்களுக்குத் தெரியுமா?"

"பாலகிருஷ்ணு! உனக்கு என்ன அதைப்பற்றிக் கவலை?"

"கவலையாகத்தான் இருக்கிறது. கலியாணம் ஆகிவிட்டால், அந்தக் குழந்தை புருஷன் வீடு போய்விடும்!"

"போனால் உனக்கு என்ன?"

"ஏதோ இந்த விடியா மூஞ்சித் தபாலாபீஸுக்கு அந்தக் குழந்தையாவது இரண்டிலே, மூன்றிலே வந்து கொண்டிருக்கிறது. அதனால் ஆபீஸ் கொஞ்சம் கலகலப்பா யிருக்கிறது. அந்தக் குழந்தையும் புருஷன் வீட்டுக்குப் போய்விட்டால் அப்புறம் இங்கே ஒரு காக்காய்கூட வராது. நீங்களும் நானும் எதிரும் புதிருமாய் உட்கார்ந்து ஈ ஓட்ட வேண்டியதுதான்!"

"பரவம்! இந்த ஆபீஸுக்கு ஈயாவது வரட்டுமே, பாலகிருஷ்ணு! அதை ஏன் ஓட்டவேண்டு மென்கிறாய்?"

"ஈயை ஓட்டாமல் என்னத்தைச் செய்வது? அதை நான் ஓட்டா விட்டால் இங்கே இருக்கிற பசையையெல்லாம் அது ஓட்டிக் கொண்டு போய்விடும். பாருங்கள் ஸார்! நான் தேவபட்டணம் தபாலாபீஸில் வேலை பார்த்தபோது மாதம் பிறந்து ஏழாந் தேதிக்குள்ளே நூறுக்குக் குறையாமல் மணியார்டர் வந்து குவியும்!"

"யாருக்கு? உனக்கா?"

"எனக்கு என்னத்திற்கு வருகிறது? கொடுத்து வைத்த மவராசன் மகன்களுக்கு வரும்."

"யாருக்கோ மணி ஆர்டர் வந்தால் உனக்கு என்ன ஆயிற்று?"

"மணியார்டர் ஒன்றுக்கு அரைக்கால் ரூபாய் விதம் நூற்றரைக்கால் இருபத்தைந்து ரூபாய் நம்பளுக்குக் கிடைக்கும்."

"நூற்றரைக்கால் இருபத்தைந்தா? கணக்கிலே புலிதான்!"

"தேவபட்டணத்தில் நூற்றரைக்கால் இருபத்தைந்துதான். இந்தத் தரித்திரம் பிடித்த ஊரில் நூற்றரைக்கால் ஏழரைகூட ஆகாது!"

"போதும்! போதும்! வேலையைப் பார், பாலகிருஷ்ணு! தங்கவேலு அதோ வந்து விட்டான்!"

வெளியே சற்றுத் தூரத்தில் 'ஜிங் ஜிங் ஜிக ஜிங்' என்ற சத்தம் கேட்டது. வர வர அந்தச் சத்தம் தபாலாபீஸை நெருங்கி வந்து கொண்டிருந்தது. தபால் ரன்னர் தங்கவேலு கையில் உள்ள ஈட்டிச் சிலம்பைக் குலுக்கி அவ்விதச் சத்தத்தை உண்டாக்கிக் கொண்டு தபால் சாவடியின் வாசலுக்கு வந்து சேர்ந்தான்.

## இரண்டாம் அத்தியாயம்

# தாயின் உள்ளம்

ராஜம் பேட்டை அக்கிரகாரத்து வீடுகளில் சரி பாதி வீடுகளுக்கு மேலே பாழடைந்து கிடந்தன. உருப்படியாக இருந்த வீடுகளில் பட்டாமணியம் கிட்டாவய்யரின் வீடு இரட்டைக் காமரா அறைகளுடன் கம்பீரமாக நிமிர்ந்து நின்றது.

வீட்டின் மூன் கட்டில் செங்கல் செமண்டு தளம் போட்ட கூடத்தில் உட்கார்ந்து கொண்டு சரஸ்வதி அம்மாள் தன் மகள் லலிதாவுக்குச் சடை பின்னி விட்டுக் கொண் டிருந்தாள். பின்னல் முடியும் சமயத்தில், தபால் ஆபீஸில் பங்காரு நாயுடுவும் பாலகிருஷ்ணனும் கேட்ட 'ஜிங் ஜிங் ஜிக ஜிங்' என்னும் சத்தம் அந்த வீட்டுக்குள்ளேயும் நுழைந்து இலேசாகக் காதில் விழுந்தது.

"எத்தனை நேரம், அம்மா! சீக்கிரம் பின்னி விடேன்!" என்றாள் லலிதா.

"மெதுவாகத் தான் பின்னுவேன். என்ன அப்படி அவசரமாம்? படை

படைக்கிறவெய்யலிலே தபாலாபீஸுக்கு ஓட வேண்டுமாக்கும்! தபால் வந்திருந்தால் எங்கே போய்விடும்? தானே பாலகிருஷ்ணன் கொண்டு வந்து தருகிறான்!"



இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே பின்னல் முடிந்து விட்டது.

அதைத் தூக்கிக் கட்டப் போகும் சமயத்தில் லலிதா சடக்கென்று பிடுங்கிக் கொண்டு எழுந்தாள்.

"நான் கட்டிக் கொள்கிறேன் அம்மா!" என்று சொல்லிக்கொண்டே வாசற் பக்கம் ஓடினாள்.

"லலிதா! லலிதா! இங்கே வா! வா என்றால் வந்து விடு! வராவிட்டால் உன்னை...... நீ மாத்திரம் போய் விடுவாயோ? அப்புறம் திரும்பி இந்த வீட்டில் அடி வைத்தால்......"

இவ்விதம் சரஸ்வதி அம்மாள் சத்தம் போட்டுக்கொண்டிருக்கும்போதே பட்டா மணியம் கிட்டா வய்யர் வீட்டுக்குள்ளே நுழைந்தார்.

அப்பாவைப் பார்த்ததும் குழந்தை லலிதா தயங்கி நின்றாள். அவளுடைய தேகம் பூங்கொடியைப் போலத் துவண்டது. கபடு சூது அறியாத அவளது குழந்தை முகத்தில் வெட்கமும் சலுகையும் போட்டியிட்டன.

லலிதாவின் தாயார் கணவனைக் கண்டதும் எழுந்து நின்றாள். அவளைப் பார்த்துக் கிட்டாவய்யர், "என்ன தடபுடல், சரசு? எதற்காகச் சத்தம் போடுகிறாய்! எப்பொழுது பார்த்தாலும் குழந்தையைக் கோபித்துக் கொள்வதுதானா உனக்கு வேலை?" என்று கடுமையான குரலில்கேட்டார்.

"ஆமாம்; உங்கள் செல்லக் குழந்தையைக் கோபித்துக்கொள்வதுதான் எனக்கு வேலை. இப்படி நீங்கள் இடம் கொடுத்துக் கொடுத்து ......"

"......இடம் கொடுத்துக் கொடுத்துச் சர்வ அசடாக ஆக்கி விட்டேன். போகட்டும்; உன் வயிற்றிலே பிறந்த போது அவள் சமத்தாகப் பிறந்தாள் அல்லவா? அது போதும். இந்தக் கலாட்டா வெல்லாம் இப்போது எதற்காக என்று கேட்கிறேன். லலிதா என்ன செய்து விட்டாள்?"

"எத்தனையோ தடவை சொல்லியாச்சு! தபால் ஆபீஸுக்குத் தனியாக ஓடுவேன் என்கிறாள். வருகிற தபால் வழியிலா நின்றுவிடும்? தை பிறந்துவிட்டது; இந்த வருஷம் எப்படியாவது குழந்தைக்குக் கலியாணம் பண்ணியாக வேணும்......"

"போதும், நிறுத்து! கலியாணத்துக்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?"

"கலியாணம் பண்ணும் வயதான பெண்ணை யாராவது இப்படித் தனியாக அனுப்புவார்களா?"

"அனுப்பினால் என்ன? பூகம்பமா வந்துவிடும்? தபால் ஆபீஸ் இரண்டு பர்லாங் தூரம்கூட இல்லை. வீட்டுக்குள்ளே பெண்களைப் பூட்டி வைக்கிற காலமெல்லாம் மலையேறிப் போய் விட்டது....லலிதா! நீ போய்வா, அம்மா! 'ரன்னர்' தங்கவேலு வருகிற சத்தம்கூடக் கேட்டது. எனக்கு ஏதாவது தபால் வந்திருந்தால் அதையும் வாங்கிக் கொண்டு வா!"

அவ்வளவுதான்; அம்மாவைக் கடைக் கண்ணால் இரக்கமாக ஒரு தடவை பார்த்து விட்டுக் குழந்தை லலிதா மானைப்போல் துள்ளி வாசலில் ஓட்டம் பிடித்தாள்.

"நானும் பார்த்தாலும் பார்த்தேன். பெண்ணுக்கு இப்படிச் செல்லம் கொடுக்கிற அப்பாவைப் பார்த்ததேயில்லை. பம்பாய்க்குப் போய்விட்டு வந்ததிலிருந்து அப்பாவும் பெண்ணும் இப்படியாகி விட்டார்கள். இதெல்லாம் என்னத்தில் போய் முடியப் போகி

றதோ, என்னமோ?" என்று சரஸ்வதி அம்மாள் முணு முணுத்தாள்.

"எல்லாம் சரியாகத் தான் முடியும்; நீ வாயை மூடிக்கொண்டிரு! மாப்பிள்ளை மட்டும் பெரிய படிப்புப் படித்தவனாய் வேண்டும் என்கிறாயே; அதற்குத் தகுந்தபடி பெண்ணைப் பழக்க வேண்டாமா? வீட்டுக்குள்ளே பொத்திப் பொத்தி வைத்துக் கொண்டிருந்தால் எப்படி நாளைக்கு......"

இதற்குள்ளே வாசலிலிருந்து யாரோ ஒருவர் வருகிற காலடிச் சத்தமும் கனைப்பும் கேட்டன.

சரஸ்வதி அம்மாளின் ஒரு பிள்ளை காலேஜில் பி. ஏ. படித்துக் கொண்டிருந்தான்; ஒரு பெண் கல்யாணத்துக்குக் காத்திருந்தாள். என்றாலும் கிராம வாச மாகையால் அன்னிய புருஷர்களைக் கண்டால் சங்கோசப்படும் சுபாவமும் அடக்கமான நடத்தையும் இன்னமும் அந்த அம்மாளிடமிருந்தன. ஆகவே யாரோ வெளி மனிதர் வருகிற சத்தம் கேட்டதும் கொஞ்சம் பின்னால் ஒதுங்கிச் சென்று தூண் ஓரத்தில் நின்றாள்.

வந்த மனிதர் கிட்டாவய்யரின் நெருங்கிய நண்பரும் உறவினருமான சீமாச்சு அய்யர். அந்த நண்பர்களுடைய பேச்சு ஒரு தனி ரகமாயிருந்தது.

"என்ன ஓய்!"

"என்ன ஓய்!"

"என்ன ஓய்!"

"என்ன ஓய்!"

"தெரியுமா ஓய்?"

"என்ன, தெரியுமா? ... ஓய்!"

"அதுதான் வடக்கே — பீஹார் மாகாணத்தில்......நீர் இன்னும் பத்திரிகை படிக்கவில்லையா, ஓய்!"

"இனிமேல்தானே பத்திரிகை வரும் ஓய்! அதற்குள்ளே ......"

"ஓகோ! மறந்துவிட்டேன். காலையில் பட்டணத்திலிருந்து நம்முடைய அத்தான் கலியாணசுந்தரம் வந்தான். வரும்போது கையில் பத்திரிகை கொண்டு வந்தான். அதில் எல்லாம் சக்கைப் போடாகப் போட்டிருக்கிறது."

"என்ன போட்டிருக்கிறது?"

"பீஹார் மாகாணத்தில் பூகம்பம் ஏற்பட்டதாம்!"

"என்ன? என்ன?என்ன?"

"பிரமாதமான பூகம்பமாம்! உயிர்ச் சேதமும் பொருட்சேதமும் ரொம்ப இருக்கலாம் என்று பயப்படுகிறார்களாம்.......பத்திரிகை பூராவும் இந்த ஒரு விஷயந்தான்! சக்கைப்போடு!"

"சீமாச்சு! இது என்ன கூத்து?"

"எது என்ன கூத்து?"

"நீ வருகிறதற்கு ஐந்து நிமிஷத்துக்கு முன்னாலேதான் பூகம்பத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன்."

"என்ன பேசிக்கொண்டிருந்தீர்?"

"சரசுவிடம், 'குழந்தை தபாலாபீஸுக்குப் போனால் பூகம்பமா வந்து விடும்?' என்று சொல்லிக் கொண்டிருந்தேன். சொல்லி வாய் மூடுவதற்குள் நீ உள்ளே நுழைந்து 'பீகாரில் பூகம்பம்' என்கிறாய்!"

"பிராமணோத்தமர் வாக்கு உடனே பலித்து விட்டதாக்கும்! நீர் என்ன சாமானியப்பட்டவரா? பெரிய வைதிக பரம்பரை. அதர்வண வேதத்தைக் கரைத்துக் குடித்தவர். ஓய்! உம்மைக் கூப்பிடுகிறாப்போல் இருக்கிறது!"

ஆம்; தூண் மறைவிலே நின்று கொண்டிருந்த சரஸ்வதி அம்மாள் சற்று முன்புறமாக வந்து கிட்டாவய்யரைத் திரும்பிப் பார்க்கும்படி செய்யச் சிரமப் பட்டுக்கொண்டிருந்தாள். இதைக் கவனித்துவிட்டுத்தான் சீமாச்சுவய்யர் அவ்விதம் சொன்னார்.

"சரசு! இப்படி முன்னால் வந்து தைரியமாகச் சொல்லேன்! நம்ம சீமாச்சுவிடம் என்ன சங்கோசம்? அதுவும் இவ்வளவு காலத்துக்குப் பிற்பாடு?"

சரஸ்வதி அம்மாள் ஈனசுவரத்தில் "அவர் என்னமோ பூகம்பம், ஈகம்பம் என்று சொல்கிறாரே? குழந்தை தனியாகப் போயிருக்கிறாளே! உடனே நீங்களாவது போய் அழைத்து வாருங்கள்; இல்லாவிட்டால் ஆள் அனுப்புங்கள்" என்றாள். (தொடரும்)

# E. W. I.

**PRESENTS FOR THE**

# SUMMER SEASON

★

THE MODERN FAN
FOR
THE MODERN AGE

★




**A. C. & D. C.**
**36", 48", 56" & 60" SWEEP**

**For Economy and Efficiency**
**SAVING 70% IN CONSUMPTION**
**Guaranteed for two years for good Performance**
SPECIAL FEATURES
**TOTALLY ENCLOSED, BOTH ENDS HAVING BALL - BEARINGS**
**Approved by I. S. D., RAILWAYS, MUNICIPALITIES & GOVT. DEPARTMENTS**
**and tested by GOVERNMENT ALIPORE TEST HOUSE**
**CONTACT Sole Distributors for Southern Madras including States and Madras City**

Phone: 4060 — Grams: AREMESCO

# RM. S. & CO. LTD.

**16, BROADWAY — MADRAS-1**

*Sub-Distributors:*

1. **S. M. T. VELU & CO., SALEM** (Coimbatore & Salem Districts)
2. **ELECTRICAL MACHINERY SYNDICATE, TIRUPATTUR (N. A.)** (North Arcot District).
3. **RAJU ELECTRIC STORES, SOUTH MAIN ST., TANJORE & BIG BAZAAR ST., NEGAPATAM** (Tanjore District).
4. **HARRY SONS & CO. LTD., CANTONMENT, TRIVANDRUM** (Travancore State)
5. **GOODMAN & CO., 39, DUPLEIX ST., PONDICHERRY** (South Arcot District inclusive of Karaikal & Pondicherry)

*Stockists:*

1. **WEST COAST TRADING CO., ERNAKULAM**
2. **RADIO HOUSE, SINGARATHOPE, TRICHINOPOLY**
3. **SHUNMUGAM & CO. 5/106, JAIL ROAD, COIMBATORE**

*Factory Representative:*

**K. RAGHAVACHARI, 310/11, LINGHI CHETTY ST., MADRAS - 1**



# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

## 17. பிரிட்டோரியாவில்

ஜோகானிஸ்பர்க் பெரிய பட்டணம். அந்தப் பட்டணத்தில் முகம்மது காஸிம் கம்ருதீன் கம்பெனியின் விலாசம் காந்திஜியிடம் இருந்தது. அப்துல்லா சேத் இந்தக் கம்பெனிக்கு முன் கூட்டியே செய்தி அனுப்பியிருந்தார். கம்பெனியின் ஆள் குதிரை வண்டி நிற்குமிடத்துக்கு வந்து காத்திருந்து விட்டுக் காந்திஜியை அடையாளம் கண்டு பிடிக்க முடியாமல் திரும்பிப் போய் விட்டான். ஆகவே, காந்திஜி ஜோகானிஸ்பர்க்கில் ஏதாவது ஒரு ஹோட்டலில் தங்குவது என்று தீர்மானித்து 'கிராண்ட் நேஷனல் ஹோட்ட'லுக்குப் போனார். ஹோட்டல் மானேஜர் காந்திஜியை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, "இங்கே இடமில்லை; வருந்துகிறேன்" என்று சொல்லி அனுப்பிவிட்டான். பிறகு காந்திஜி கம்ருதீன் கம்பெனிக்குச் சென்றார். அங்கே அப்துல் கனி சேத் என்பவர் காந்திஜியை வரவேற்றார். காந்திஜி ஹோட்டலுக்குச் சென்று நடந்த விவரத்தைச் சொன்னதும் அப்துல் கனி சேத் இடி இடியென்று சிரித்தார். "ஹோட்டலில் தங்கலாம் என்று பார்த்தீர்களா? ஓஹோஹோ!" என்று மறுபடியும் சிரித்தார். சிரிப்புக்குக் காரணம் கேட்டபோது, "கொஞ்சகாலம் இந்த நாட்டில் இருந்தால் நீங்களே எல்லாம் தெரிந்து கொள்வீர்கள். ஹோட்டலில் கறுப்பு மனிதர்களுக்கு இடம் தரமாட்டார்கள். என்னைப் போன்ற வியாபாரிகள் இங்கே பணம் சம்பாதிப்பதற்காக வந்திருக்கிறோம். ஆகையால் கஷ்டங்களையும் அவமானங்களையும் பொறுத்துக் கொண்டிருக்கிறோம். உங்களால் இந்த நாட்டில் இருக்கவே முடியாது. ஒரு விஷயம் தெரிந்து கொள்ளுங்கள். நாளைக்கு நீங்கள் பிரிட்டோரியாவுக்குப் போகவேண்டும் அல்லவா? ரயிலில் மூன்றாம் வகுப்பிலேதான் பிரயாணம் செய்தாக வேண்டும். நேட்டால் நிலைமையைக் காட்டிலும் டிரான்ஸ்வாலில் நிலைமை கேவலம். இங்கே இரண்டாம் வகுப்பு முதல் வகுப்பு டிக்கட்டுகள் இந்தியர்களுக்குக் கொடுக்கவே மாட்டார்கள்" என்றார் அப்துல் கனி.

"முதல் வகுப்பு டிக்கட் வாங்க நீங்கள் ஒருவேளை பிடிவாதமாக முயற்சி செய்திருக்க மாட்டீர்கள்" என்றார் காந்திஜி.

பிறகு ரயில்வே விதிகள் அடங்கிய புத்தகம் தருவித்துப் பார்த்தார். விதிகள் வழ வழ குழ குழ வென்று இருந்தன. ரயில்வே அதிகாரிகள் இஷ்டப்படி டிக்கட் கொடுக்க மறுப்பதற்கு அந்த விதிகள் இடங் கொடுக்குமெனத் தோன்றிற்று.

"முதல் வகுப்பு டிக்கட் வாங்குவதற்கு முயற்சிக்கிறேன். அது முடியாவிட்டால் ஜட்கா வண்டியில் நேரே பிரிட்டோரியாவுக்குப் போய்விடுகிறேன்" என்று காந்திஜி சொன்னார்.

ஜோகானிஸ்பர்க் நகரத்திலிருந்து பிரிட்டோரியா முப்பத்தேழு மைல் தூரம் தான். ஆகவே குதிரை வண்டியில் போவது அசாத்திய மல்ல.

மேற்கண்டபடி முடிவு செய்துகொண்டு ஸ்டேஷன் மாஸ்டருக்குக் காந்திஜி ஒரு கடிதம் எழுதினார். தாம் அவசரமாக பிரிட்-

டோரியா போகவேண்டி யிருக்கிறதென்றும், முதல் வகுப்பு டிக்கட் வேண்டும் என்றும், காலையில் நேரில் வந்து டிக்கட் பெற்றுக் கொள்வதாகவும் கடிதத்தில் எழுதி யிருந்தார். பதில் வேண்டுமென்று கேட்கவில்லை. பதில் கேட்டால் ஒருவேளை 'டிக்கட் இல்லை' என்று கண்டிப்பாக எழுதிவிடக்கூடும் அல்லவா? நேரில் சந்தித்தால் விவாதம் செய்து பார்க்கலாம்.

மறுநாள் காலையில் பிரிட்டோரியா ஸ்டேஷனுக்குச் சென்று ஸ்டேஷன் மாஸ்டரைச் சந்தித்து முதல் வகுப்பு டிக்கட் கேட்டார்.

ஸ்டேஷன் மாஸ்டர் புன்னகை புரிந்த வண்ணம் "கடிதம் எழுதியது நீங்கள் தானே?" என்றார்.

"ஆம்; பிரிட்டோரியாவுக்கு இன்று அவசியம் நான் போகவேண்டும்" என்றார் காந்திஜி.

ஸ்டேஷன் மாஸ்டர் கூறியதாவது:— "இதோ பாருங்கள். நான் இந்த ஊர்க்காரன் அல்ல; ஹாலந்து தேசத்தவன். உமக்கு டிக்கட் கொடுக்கவே விரும்புகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. ரயில்வே கார்ட் உம்மை முதல் வகுப்பிலிருந்து மூன்றாம் வகுப்புக்குப் போகச் சொன்னால் அதற்கு நான் ஜவாப்தாரியல்ல. என்மேல் புகார் சொல்லவும் கூடாது; கம்பெனியின் பேரில் வழக்குத் தொடரவும் கூடாது! அப்படி ஏதாவது செய்தால் என் பாடு சங்கடமாகி விடும்."

காந்திஜி மேற்படி நிபந்தனைக்குச் சம்மதித்து டிக்கட் பெற்றுக் கொண்டார்.

"உம்மைப் பார்த்தால் கண்ணியமான மனிதராகத் தோன்றுகிறது. சுகமாகப் போய் வாரும்!" என்று ஆசி கூறினார் ஸ்டேஷன் மாஸ்டர்.

அப்துல் கனி சேத், காந்திஜியை ரயிலேற்றி அனுப்புவதற்காக ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். முதல் வகுப்பு டிக்கட் கிடைத்தது பற்றி அவருக்கு ஒரு பக்கத்தில் ஆச்சரியம்; இன்னொரு பக்கம் சந்தோஷம். ஆனாலும் காந்திஜிக்கு ஒரு எச்சரிக்கையும் செய்து வைத்தார்:—

"டிக்கட் என்னமோ கிடைத்து விட்டது. ஆனால் கார்டு உங்களை முதல் வகுப்பில் விட்டு வைப்பானா என்பது சந்தேகம் தான். அவன் விட்டு வைத்தாலும் மற்ற ஐரோப்பியப் பிரயாணிகள் ஆட்சேபிக்கக் கூடும். எப்படியோ ஆண்டவன் புண்ணியத்தில் நீங்கள் சுகமாகப் பிரிட்டோரியா போய்ச் சேரவேண்டியது."

இந்த எச்சரிக்கையைக் காதில் வாங்கிக் கொண்டே காந்திஜி ரயில் ஏறினார். முதல் வகுப்பு வண்டியிலேதான். ரயில் புறப்பட்டது. ஜெர்மிஸ்டன் என்னும் அடுத்த ஸ்டேஷனில் கார்டு டிக்கட் சோதனைக்கு வந்தான். முதல் வகுப்பு வண்டியில் கறுப்பு மனிதனைப் பார்த்ததும் கார்டுக்குக் கடுங் கோபம் வந்துவிட்டது. "இறங்கு கீழே! மூன்றாம் வகுப்புக்குப் போ!" என்றான்.

காந்திஜி தம்மிடமிருந்த முதல் வகுப்பு டிக்கட்டைக் காட்டினார்.

"அக்கரை இல்லை! போ, மூன்றாம் வகுப்புக்கு!" என்றான் கார்டு.

அந்த வண்டியில் ஐரோப்பியர் ஒருவர் தான் இருந்தார். அவர் நல்ல மனிதர். கார்டைப் பார்த்து, "ஏனையா இவரைத் தொந்தரவு செய்கிறீர்? முதல் வகுப்பு டிக்கட்தான் வைத்திருக்கிறாரே! இவர் இந்த வண்டியில் வருவதில் எனக்குச் சிறிதும் ஆட்சேபம் இல்லை!" என்றார்.

"கூலியுடன் பிரயாணம் செய்ய உமக்கு விருப்பமா யிருந்தால் எனக்கு என்ன வந்தது?" என்று முணுமுணுத்துக் கொண்டே கார்டு போய்விட்டான்.

இதற்குப் பிறகு வழியில் விபத்து ஒன்றும் ஏற்படாமல் பிரயாணம் நடந்தது.

* * *

காந்திஜி பிரிட்டோரியா ஸ்டேஷனை அடைந்தபோது இரவு நேரம். ஐம்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் 1893-ம் ஆண்டில் நடந்த வரலாறு அல்லவா? அப்போது மின்சார விளக்குகள் இல்லை. ஸ்டேஷனில் தீபங்கள் மங்கலாக எரிந்தன. பிளாட்பாரத்தில் பிரயாணிகள் அதிகம் பேரில்லை. காந்திஜியை அழைத்துப்போக நகரிலிருந்து யாரும் வந்திருக்கவும் இல்லை. எங்கே போவது, என்ன செய்வது என்று புரியாமல் காந்திஜி திகைத்தார். ஹோட்டல்களிலோ 'கூலி' இந்தியருக்கு இடம் கொடுக்க மாட்டார்கள்.

எல்லாப் பிரயாணிகளும் போனபிற்பாடு டிக்கட் கலெக்டரிடம் நகரில் தங்குவதற்கு இடம் கிடைக்குமா என்று விசாரிக்கலாம், அல்லது ஸ்டேஷனிலேயே இரவு தங்கி விடலாம் என்று எண்ணிக் காந்திஜி காத்துக் கொண்டிருந்தார். இந்த விஷயம் கேட்

பதற்குக்கூட யோசனையாகத்தானிருந்தது. ஒருவேளை டிக்கட் கலெக்டரும் அவமதிப்பானோ என்னமோ?

அவ்விதம் ஒன்றும் நேரவில்லை. டிக்கட் கலெக்டர் மரியாதையாகப் பதில் சொன்னான். ஆனால் ஹோட்டலைப் பற்றி அவனால் தகவல் கொடுக்க முடியவில்லை. பக்கத்தில் நின்று மேற்படி சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டிருந்த நீக்ரோ கனவான் ஒருவர், "நீங்கள் இந்த நகருக்குப் புதியவர்போலிருக்கிறது. அமெரிக்கர் நடத்தும் சிறிய ஹோட்டல் ஒன்றை எனக்குத் தெரியும். அங்கு வேணுமானால் உங்களை அழைத்துப் போகிறேன்" என்றார்.

அவ்விதமே அவருடன் காந்திஜி சென்று அமெரிக்கரின் ஹோட்டலை அடைந்தார். ஹோட்டல் சொந்தக்காரர் பெயர் மிஸ்டர் ஜான்ஸ்டன். அவர் காந்திஜிக்கு இரவு தங்க இடம் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார்.




"ஆனால் எல்லாரும் சாப்பிடும் பொது போஜன அறையில் சாப்பாடு போட்டால் மற்ற ஐரோப்பியர்கள் கோபித்துக் கொள்ளலாம். உங்களுடைய அறைக்கே சாப்பாடு அனுப்பி விடுகிறேன்" என்றார்.

இந்த மட்டும் தங்குவதற்கு இடம் கொடுத்ததற்காகக் காந்திஜி அந்த ஹோட்டல்காரருக்கு வந்தனம் செலுத்தினார்.

மறுநாள் காலையில் அப்துல்லா சேத்தின் அட்டர்னி மிஸ்டர் பேக்கர் என்பவரைக் காந்திஜி போய்ப் பார்த்தார். காந்திஜியை அவர் முகமலர்ச்சியுடன் வரவேற்று விட்டுச் சொன்னதாவது:—

"இங்கே கோர்ட்டில் வழக்கு நடத்தப் பெரிய பாரிஸ்டர்களை அமர்த்தி யிருக்கிறோம். ஆகையால் கோர்ட்டில் பேச வேண்டிய வேலை உங்களுக்கு ஏற்படாது. வழக்கு ரொம்பவும் சிக்கலானது. அது சம்பந்தமாக வேண்டிய தகவல்களை யெல்லாம் சேகரித்துக் கொடுக்க உங்களுடைய உதவி தேவையாயிருக்கும். கட்சிக்காரரிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டியதை யெல்லாம் இனி உங்கள் மூலமாகவே தெரிந்து கொள்வேன். இந்த நாட்டில் நிறவேற்றுமை உணர்ச்சி அதிகம். உங்களுக்கு ஜாகை அகப்படுவது கஷ்டம். எனக்குத் தெரிந்த ஏழை ஸ்திரீ ஒருத்தி இருக்கிறாள். அவள் ஒரு வேளை உங்களுக்கு ஜாகையும் உணவும் கொடுக்கச் சம்மதிக்கலாம். போய்க் கேட்கலாம், வாருங்கள்!"

இவ்விதம் கூறி அவர் காந்திஜியை அந்த ஏழை ஸ்திரீயின் வீட்டுக்கு அழைத்துச் சென்றார். வாரத்துக்கு 35 ஷில்லிங் வாங்கிக்கொண்டு அந்த ஆங்கில மாது காந்திஜிக்கு இடம் கொடுத்துச் சாப்பாடு போடவும் சம்மதித்தாள்.

மிஸ்டர் ஜான்ஸ்டனுடைய ஹோட்டலி லிருந்து காந்திஜி ஜாகையைப் புது இடத் துக்கு மாற்றிக் கொண்டார். அந்தப் பெண் மணி மிகவும் நல்லவள். காந்திஜியை மிக அன்போடு நடத்தினாள். அவருக்காக மரக்கறி உணவு தயாரித்துக் கொடுத்தாள். வெகு விரைவில் காந்திஜி அவளுடைய குடும்பத்தைச் சேர்ந்தவர்போலாகிவிட்டார்.

# 18. சமூகத் தொண்டு

பிரிட்டோரியா போய்ச் சேர்ந்த சில தினங்களுக்குள் அந்நகரிலிருந்த பல இந்தி யப் பிரமுகர்களைக் காந்திஜி அறிமுகம் செய்து கொண்டார். பிறகு இந்தியர்களின் பொதுக் கூட்டம் ஒன்றைக் கூட்டினார். சேத் ஹாஜி முகம்மது என்னும் முஸ்லிம் பிரமுகர் வீட்டில் பொதுக்கூட்டம் நடந்தது. முதன் முதலாகக் காந்திஜி பொதுக் கூட் டத்தில் தைரியமாகப் பேசத் தொடங்கி யது இந்தக் கூட்டத்திலேதான்.



★ ★ ★ காந்தி மகான் அவதரித்த இடமும் அவருடைய ஆத்ம சக்தி உருவாகிப் பிரகாசித்த இடமும் இந்தப் படத் தில் குறிப்பிடப்பட் டிருக்கின்றன ★ ★ ★

மூன்று விஷயங்களைப் பற்றிக் காந்திஜி பேசினார். முதலாவது, வியாபாரத்தில் உண்மையைக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியம். சாதாரணமாக, வியாபாரி களுக்குள் ஒரு நம்பிக்கை பரவியிருந்தது. அதாவது வர்த்தகத் துறையில் சத்தியம் செல்லுபடியாகாது என்பது. சத்தியம் மத சம்பந்தமான விஷயம் என்றும், வர்த்தகம் உலக விவகாரம் என்றும், ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லையென்றும் அவர்கள் கருதி னார்கள். இது சுத்தத் தவறான கொள்கை என்று காந்திஜி வற்புறுத்தினார். முக்கிய மாக, வெளிநாட்டுக்கு வந்திருக்கும் இந்தி யர்கள் எல்லாத் துறைகளிலும் சத்தியத் தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்றும், அவர்களுடைய ஒழுக்கத்தைக் கொண்டே உலகமானது இந்திய சாதியின் ஒழுக்க நிலையை அளவிடும் என்றும் எடுத்துக் காட்டினார். அதாவது தென்னாப்பிரிக்காவில் சில இந்திய வியாபாரிகள் பொய் சொல்லுவ தாகவோ ஏமாற்றுவதாகவோ ஏற்பட்டால், "ஓ! இந்த இந்தியர்களே இப்படித்தான்! பொய் சொல்லும் சாதி இந்திய சாதி!" என்று அங்குள்ள ஐரோப்பியர்கள் சொல் வார்கள். இந்த அபிப்பிராயம் உலகம் எல்லாம் பரவி இந்திய மக்களின் கௌரவத் தையே நாசமாக்கிவிடும். இதைக் காந்திஜி நன்கு எடுத்துக் கூறி வற்புறுத்தினார்.

இரண்டாவது, தென்னாப்பிரிக்காவில் வாழும் இந்தியர்களின் பழக்கவழக்கங்களைப் பற்றியது. தென்னாப்பிரிக்கா வெள்ளைக் காரரின் பழக்க வழக்கங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால், இந்தியர்களுடைய பழக்க வழக் கங்கள் சுகாதாரக் குறைவாயிருப்பதைக் காந்திஜி சுட்டிக் காட்டினார்.

மூன்றாவது, வெளிநாட்டுக்கு வந்திருக் கும் இந்தியர்கள் தங்களுக்குள் ஹிந்து, முஸ்லிம், கிறிஸ்துவர் என்ற மதவேற்றுமை யையும் குஜராத்தி, மதராஸி, பஞ்சாபி முதலான மாகாண வேற்றுமைகளையும் அடி யோடு மறந்து ஒற்றுமையடைய வேண்டும்

என்றும், அப்போதுதான் அவர்களுடைய உரிமைகளை ஓரளவாவது காப்பாற்றிக் கொள்ள முடியும் என்றும் சொன்னார்.

கடைசியாக, இந்தியர்களுக்கு இங்கே அநேக கஷ்டங்கள் இருப்பதால் அவற்றை அதிகாரிகளுக்கு எடுத்துச் சொல்லிப் பரிகாரம் தேடுவதற்கு ஒரு சங்கம் அமைக்க வேண்டும் என்றும் யோசனை சொன்னார்.

காந்திஜியின் பிரசங்கம் அங்கே கூடியிருந்தவர்களின் கவனத்தைப் பெரிதும் கவர்ந்தது. அவர் கூறிய விஷயங்கள் பற்றிச் சிறிது நேரம் விவாதம் நடந்தது. மாதம் ஒரு முறை அம்மாதிரி பொதுக் கூட்டம் நடத்த வேண்டும் என்று முடிவாயிற்று. இந்தியர்களின் கஷ்டங்களைப் பற்றிய விவரங்களைச் சேகரித்துத் தருவதற்குச் சில பிரமுகர்கள் முன் வந்தார்கள்.

அந்தக் கூட்டத்துக்கு வந்திருந்தவர்களில் பலருக்கு ஆங்கில பாஷை தெரியவில்லை என்பதைக் காந்திஜி கண்டார். தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களுக்கு ஆங்கில பாஷை உபயோகமாயிருக்கு மாதலால் யாராவது ஆங்கிலம் கற்றுக் கொள்ள விரும்பினால் தாமே சொல்லிக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார். மூன்று பேர் அவ்விதம் ஆங்கிலம் கற்றுக்கொள்ள முன் வந்தனர். அவர்களில் ஒருவர் நாவிதர்; ஒருவர் குமாஸ்தா; ஒருவர் சில்லறைக் கடைக்காரர். பின் இருவரும் எட்டு மாதத்தில் நல்ல ஆங்கில பாஷா ஞானம் பெற்றார்கள். அதனால் அவர்களுடைய வருமானமும் உயர்ந்தது. நாவிதர் தம்மிடம் க்ஷவரம் செய்துகொள்ள வருவோரிடம் பேசவேண்டிய அளவுக்கு இங்கிலீஷ் கற்றுக் கொண்டாராம்.

* * *

முதற் கூட்டத்தில் செய்த தீர்மானத்தின்படி மாதாமாதம் தவறாமல் இந்தியர்களின் பொதுக்கூட்டம் நடந்து வந்தது. அந்தக் கூட்டங்களில் எல்லாரும் தத்தம் அபிப்பிராயங்களைத் தாராளமாய்த் தெரிவித்தார்கள். இந்தக் கூட்டங்களின் காரணமாக, பிரிட்டோரியாவில் இருந்த அத்தனை இந்தியர்களையும் காந்திஜி தெரிந்து கொண்டார். அவர்களில் ஒவ்வொருவருடைய நிலைமையையும் பற்றித் தனித் தனியே அறிந்து கொண்டார்.

டிரான்ஸ்வாலிலும் அதை அடுத்த ஆரஞ்சு பிரீஸ்டேட் மாகாணத்திலும் இந்தியர்களுக்கு இழைக்கப்பட்டு வந்த அநீதிகளைப் பற்றிய விவரங்களை அறிந்தார்.

ஆரஞ்சு பிரீஸ்டேட் மாகாணத்தில் 1888-ம் ஆண்டில் ஒரு விசேஷ சட்டம் இயற்றி இந்தியர்களுடைய பிரஜா உரிமைகள் எல்லாவற்றையும் பறித்துவிட்டார்கள். பல காலமாக அங்கே தங்கி வியாபாரத் துறையில் ஈடுபட்டிருந்த இந்தியர்களைப் பெயருக்கு நஷ்ட ஈடு என்று கொடுத்துத் துரத்தி விட்டார்கள். அந்த மாகாணத்தில் இந்தியர்கள் இருக்க விரும்பினால் ஹோட்டல் வேலைக்காரர்களாகவோ அல்லது வேறு சிற்றூழியம் செய்பவர்களாகவோதான் இருக்கலாம் என ஏற்பட்டது.

டிரான்ஸ்வாலில் 1885, 1886-ம் ஆண்டுகளில் மிகக் கடுமையான சட்டங்கள் இந்தியருக்கு விரோதமாகச் செய்யப்பட்டன. அச்சட்டங்களின்படி, டிரான்ஸ்வாலுக்குள் வரும் ஒவ்வொரு இந்தியனும் மூன்று பவுன் தலை வரி கொடுக்க வேண்டும். இந்தியர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களிலேயே அவர்கள் நிலம் வைத்துக் கொள்ளலாம். காரியாம்சத்தில் அந்த நிலமும் அவர்களுக்குச் சொந்தமாகாது. இந்தியர்களுக்கு வாக்குரிமை கிடையாது. இந்தியர்கள் உள்படக் கறுப்பு மனிதர்களில் யாரும் பொது நடைப் பாதைகளில் நடக்கக்கூடாது.

இரவு ஒன்பது மணிக்குமேலே கறுப்பு மனிதர்கள் வெளியே புறப்படக் கூடாது என்று ஒரு விதி சொல்லிற்று. ஆனால் இந்த விதியைச் சமயோசிதம்போல் பிரயோகித்தார்கள். தங்களை 'அரபியர்கள்' என்று சொல்லிக் கொண்ட இந்தியர்கள் மீது தாட்சண்யம் காட்டி மேற்படி விதியைப் பிரயோகம் செய்வதில்லை. ஆனால் விதி விலக்குச் செய்வது போலீஸ்காரனின் சித்தத்தையே பொறுத்த காரியமாயிருந்தது.

மேற்படி அநீதமான சட்டங்களையும் விதிகளையும் பற்றிக் காந்திஜி கேட்டுத் தெரிந்து கொண்டார். தமது சொந்த அநுபவத்திலிருந்தும் தெரிந்து கொண்டார். சுயமரியாதையுள்ள இந்தியன் எவனும் தென்னாப்பிரிக்காவில் வசிப்பதற்கு லாயக்கில்லை என்று அறிந்தார். இந்தக் கேவலமான நிலைமையைச் சீர்திருத்துவது எப்படி என்று அடிக்கடி சிந்தனை செய்யலானார்.

இதற்கிடையில் தாதா அப்துல்லாவின் வழக்கு சம்பந்தமாகவும் காந்திஜி தீவிர கவனம் செலுத்தினார்.

(தொடரும்)

# கல்கி
## பம்பாய் ஆபீஸ்

கல்கி காரியாலயத்தின் பம்பாய் ஆபீஸ் இந்த மாதம் கடைசி வாரத்திலிருந்து ஆரம்பமாகிறது. பம்பாய் கல்கி காரியாலயத்தின் பிரதிநிதியாக ஸ்ரீ எச். சிவராம கிருஷ்ணன் அவர்கள் நியமிக்கப் பட்டுள்ளார்கள்.

இந்த மாதக் கடைசி வார இதழிலிருந்து கல்கியின் வினியோகத்தை மேற்படி ஆபீஸ் கவனித்து வரும். ஆகவே பம்பாயிலுள்ள கல்கி நேயர்கள் தங்கள் பிரதிகளை வாராவாரம் ஸ்ரீ எச். சிவராம கிருஷ்ணன், அகில-குஞ்ச், பிராமின்வாடா ரோடு, மாதுங்கா, பம்பாய்-19 என்ற விலாசத்தில் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள். இதுவரை பம்பாயில் கல்கி ஏஜெண்டுகளாக இருந்த சரோஜினி ஸ்டோர்ஸாரின் கல்கி ஏஜன்ஸி மார்ச் மாதம் 22 தேதியுடன் ரத்தாகி விட்டது.

# நடக்காத கல்யாணம்



பாலு

எல்லோரையும்போல் எனக்குக் காலா காலத்தில் விவாகம் நடக்கவில்லை. கட்டுக் கடங்காத வாலிப் பருவம் முடிவை நெருங்கிக் கொண்டிருந்த முப்பதாவது வயதில்தான் எனக்குக் கல்யாணம் நடந்தது. வாலிப மிடுக்கில் நான் கற்பனை செய்து பார்த்திருந்த மனைவிக்கும், அக்னி சாட்சியாகக் கலியாணம் செய்துகொண்ட என் தர்மபத்தினிக்கும் உருவத்தில் எவ்வளவோ வேற்றுமைகள் இருந்தன. கலியாணத்திற்குமுன் என் ஜாதகத்தைப் பார்த்த ஜோசியர்கள், "இன்னும் கேது தசை இந்த ஜாதகனுக்கு வரவில்லை, அதனால்தான் கலியாணம் நடக்கவில்லை!" என்றார்கள். "சம்பு மாமி பிள்ளைக்கு ஏன் இன்னும் கலியாணம் ஆகவில்லையாம்?" என்று அக்கிரகாரத்து ஸ்திரீகள் ஒரு கேள்வியைப் போட்டுக் கொண்டு, அதற்கு விடை கண்டு பிடிக்க முயன்று கொண்டிருந்தார்கள்.

எல்லோரையும்விட என் கலியாண விஷயத்தில் ஏமாந்து போனவள் என் பாட்டிதான். பன்னிரண்டு வயதில் எனக்கு நடந்த உபநயனத்தைப் பார்த்து விட்டுச் சாக வேண்டும் என்று சங்கல்பம் செய்து கொண்டிருந்த என்னுடைய எண்பது வயதுப் பாட்டி, தொண்ணூறாவது வயதில் பேரனுக்குப் பெண்டாட்டி வருவதற்குள் எமன் கொண்டுபோகிறானே என்று நெஞ்சு வேகாமல் இறந்து போனாள்!

நல்ல வேளை, மாமியாரிடம் மிகவும் அல்லல் பட்ட என் தாயாருக்குத் தன் அதிகாரத்தைக் காண்பிக்க, ஒரு நல்ல நாட்டுப் பெண் அவளுடைய ஜீவிய காலத்திற்குள் வரவேண்டுமே என்ற ஆதங்கத்தையாவது என்னால் தீர்த்து வைக்க முடிந்ததே!

இரண்டு வருஷங்களுக்கு முன்பு நடந்த சம்பவம் அது. மற்றவர்கள் சாதாரணமாக ஒதுக்கித் தள்ளிவிடும் விஷயமாக இருக்கும் அச்சம்பவம், என் மனதிலிருந்து நிலை பெயராமல் இருப்பதற்குக் காரணம் இல்லாமற் போகவில்லை.

சென்னையில் அப்போது நான் தனியாக ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டு காலத்தைத் தள்ளி வந்தேன். அந்த வருஷம் எப்படியாவது எனக்கு ஒரு கலியாணத்தைச் செய்துவைத்து, என்னைக் கிருகஸ்தனாகச் செய்துவிட வேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தார்கள் என் பெற்றோர். அதற்கு ஏற்றாற்போல் அந்த வருஷம் ஒரு பெண்ணின் ஜாதகம் என் ஜாதகத்துடன் பொருந்தியிருந்தது. பெண்ணின் பெயர் ஜானகி. பெயருக்குத் தகுந்தாற்போல் லட்சண்யமாகவே இருந்தாள் அவள். லௌகிக விஷயங்களும் பேசித் தீர்ந்தாகி விட்டது. இரண்டாயிரம் ரூபாய் கையில் கொடுத்துக் கலியாணச் செலவையும் செய்து விடுவதாகப் பெண்ணின் பெற்றோர் சொன்னதற்கு என் பெற்றோரும் சம்மதித்து விட்டார்கள். பெண்ணை வந்து பார்ப்பதற்கு ஒரு நாளும் குறிப்பிட்டு எனக்குத் தகவல் அனுப்பியிருந்தார் என் தகப்பனார்.

மேலுக்குக் கலியாணம் வேண்டாம் என்று சொன்னாலும்; பெற்றோரின் ஆசையை நிறைவேற்றுவதைக் காரணமாக்க் காட்டி, கிருகஸ்தாஸ்ரமத்தில் நுழைவதை நான் விரும்பத்தான் விரும்பினேன். யாருக்கும் சகஜமாக இந்த வயதில் ஏற்படும் ஓர் எண்ணம்தானே என்னுடையதும்? அதில் தவறென்ன இருக்கமுடியும்?

பெண்ணினுடைய கிருகம் திருவாரூரில் இருந்தது. தகப்பனாருடைய வேண்டுகோளின்படி அம்மாவுடன் பெண்ணைப் பார்க்கச் சென்றேன். 'பட்டணத்திலிருந்து வந்த பிள்ளை' என்பதை என்னால் எவ்வளவு தூரம் வெளிப்படுத்த முடியுமோ, அவ்வளவு தூரம் அதை வெளிப்படுத்திக் கொண்டு மிடுக்காகவே சென்றேன். சம்பிரதாயப்படி அவர்கள் முதல்தரமாகச் செய்திருந்த 'சொஜ்ஜி டிப'னைச் சாப்பிட்டுவிட்டுப் பரிசீலனைக்குத் தயாராக இருக்கும் பெண்ணை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தேன்.

அடக்க வொடுக்கமாக ஒரு மோகன ரூபம் வந்து என்னை நமஸ்கரித்துச் சென்றது. எல்லோருடைய விஷயத்திலும் நடப்பதுபோலவே, நமஸ்காரம் செய்துவிட்டு எழுந்திருக்கும்போது, என் கண்கள் அந்தப் பெண்ணினுடைய கண்களை வருடிச் சென்றன. அந்த க்ஷண நேரத்தில் எங்கோ ஆகாயத்தில் பறப்பதுபோன்ற உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. பிறகு பெண்ணைப் பாடச் சொன்னார்கள். பாட்டு மட்ட ரகந்தான்; இருந்தாலும், "கல்யாணம் செய்து கொள்ளப்போவது அந்தப் பெண்ணைத்தானே தவிர அவள் பாட்டை அல்லவே!" என்ற நினைப்பில் அதைப்பற்றி என்னுடைய சிந்தனையை அதிகம் செலுத்தவில்லை.

சீர்த்த அழகி என்று சொல்லுவதற்கு என்னென்ன லட்சணங்கள் தேவையோ அவை முழுதும் இருந்தன அந்தப் பெண்ணிடம். என்னுடைய கற்பனை மனைவியைவிட அவள் சௌந்தர்யமுள்ளவளாக இருந்ததால், என்னுடைய சம்மதத்தை அவர்களுக்கு உடனே தெரியப்படுத்திவிட்டதில் ஒன்றும் ஆச்சரியமில்லை யல்லவா?

★

சென்னைக்குத் திரும்பியதிலிருந்து என் மனம் ஒரு நிலையில் இல்லை என்று சொன்னால் மிகையாகாது. கொஞ்ச நாட்கள் கழித்துக் கலியாணம் செய்து கொண்டாலும் நல்லதாகவே தேர்ந்தெடுத்து விட்டோம் என்ற நினைப்பில் நான் மிகவும் பெருமை கொண்டிருந்தேன். அதென்னவோ தன்னுடைய மனைவி அழகானவள் என்ற மனத் தேறுதலில் மனிதன் மற்ற விஷயங்களை மறந்துவிடுவது ஓர் அசட்டுச் சுபாவம். ஆகவே, முகூர்த்தம் எந்தத் தேதியில் குறிப்பிட்டிருக்கிறார்கள் என்ற கடிதத்தைத் தகப்பனாரிடமிருந்து நான் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

ஆனால் என் ஆசை நிராசையாய்ப் போய்விட்டது. என்ன காரணத்தினாலோ என்னுடைய கலியாணம் தடைப்பட்டுப் போய்விட்டது. பெண்ணினுடைய உறவினர் யாரோ ஒருவர் இறந்து விட்டதால், அந்த வருஷம் கலியாணத்தை நடத்துவதற்கில்லை என்ற அவர்களுடைய சமாதானம் என் மனதிற்குச் சரியாகவே படவில்லை. என்னுடைய அதிர்ஷ்டத்தை நொந்து கொள்வதைத் தவிர வேறு ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை. கலியாணமே வேண்டாம்



என்ற நினைப்பு வரையில் என் மனம் முறிந்து விட்டது!

ஆனால் பெற்றோர் சும்மா இருக்க விட்டால்தானே? அடுத்த வருஷம் வேறு இடத்தைப் பிடித்தார்கள். உடனே என்னை வந்து பெண்ணைப் பார்த்து விட்டுப் போகும்படி கடிதம் எழுதியிருந்தாள் அம்மா. 'திருவாரூர்ப் பெண்ணைப் பார்த்து விட்டு, இன்னொரு பெண்ணைப் பார்க்கச் சொல்வதாவது!' என்று முதலில் நான் நினைத்தாலும், என்னுடைய தாயாருடைய உருக்கமான வேண்டுகோளினால் என்னுடைய பிரயாணத்தை நான் தொடங்க வேண்டியதாயிற்று. போய்ப் பெண்ணைப் பார்த்து விட்டு நன்றாக இல்லை என்று சொல்லித் தட்டிக் கழித்து விடுவோம் என்கிற எண்ணத்தில் தைரியமாகவே கிளம்பினேன்.

பரிசீலனையும் நடந்தது. முதல் தடவை பார்த்ததைவிட எவ்வளவோ மட்டம் இந்த இடம். போதாக்குறைக்குச் சீர் செனத்தியையும் ரொம்பவும் குறைத்துவிட்டார்கள் என்பது அம்மாவின் குறை. எனக்காகக் கலாசாலைகளில் செலவழித்த பணத்தில் பாதிகூடத் தேறவில்லை என்பது அப்பாவின் அபிப்பிராயம்.

பெண்ணின் தகப்பனாருக்கு வக்கீல் குமாஸ்தா உத்தியோகம். மிகவும் குறைந்த வருவாய். இருந்தபோதிலும் ஏதோ கூடாமல் குறையாமல் செய்வதாக வாக்களித்திருந்தார். சுமார் அழகு என்று சொல்லும் நிலைமைக்குக் கூடப் பெண் இல்லை. இப்படி இருக்கும்போது என்னுடைய தீர்ப்பு எப்படிச் சாதகமாக இருந்திருக்க முடியும்? என்ன காரணம் சொல்லி இந்தப் பெண்ணைத் தட்டிக் கழித்து விடலாம் என்று நெடு நேரம் யோசித்தேன். கடைசியில், "ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுகிறோம்" என்று சம்பிரதாயப்படி சொல்லிவிட்டுச் சிதம்பரத்திலிருந்து கிளம்பினோம். நானும் என் அம்மாவும் அவர்களிடம் விடை பெற்றுக் கொள்ளும்போது, என் காதில் படும்படியாகப் பெண்ணின் தகப்பனார் என் அம்மாவிடம் சொன்னார்:



"சரி, அப்படியானால் ஊருக்குப் போனதும் கட்டாயம் கடிதம் எழுதுங்கள்; ஒரு நல்ல முகூர்த்தமாகப் பார்த்து வருகிற மாதத்திலேயே கல்யாணத்தை நடத்திவிடலாம். வீண் பெருமைக்காகச் சொல்லுகிறேன் என்று நினைக்காதீர்கள்; நம் வீட்டுப் பெண் வெகு சூடிகை. இந்தக் கல்யாணம் முடிவதில் அவளுக்குப் பரம திருப்தி. ஏதோ 'பிராப்தம்' இருந்து நடந்தால் அவளுக்கு அதிர்ஷ்டம்தான்!"

இவ் வார்த்தைகளைக் கேட்டுத் திரும்பும்போது என் பார்வை தற்செயலாக வாசல் அறையிலிருந்த ஜன்னலில் விழுந்தது. கம்பியைப் பிடித்துக் கொண்டு மிகுந்த ஆர்வத்துடன் கல்யாணப் பெண் நின்று கொண்டிருந்தாள். அவளுடைய பார்வை

என்னை என்னவோ செய்தது. கடிதத்தின் மூலம் ஒரு பெண்ணின் ஆசையைப் பாழாக்கப் போகிறோமே என்ற பச்சாத்தாபம் என் மனத்தில் தோன்றியது.

★

அம்மாவை மாயவரத்தில் கொண்டு போய் விட்டுவிட்டு மறுநாள் சென்னைக்குக் கிளம்பினேன். இன்னும் இரண்டு நாட்கள் கழித்து, "திருப்தியில்லை" என்று பதிலை அனுப்பிவிடுமாறு சொல்லி விட்டேன்.

ரயிலில் ஏகக் கூட்டம். காவேரி ஜலத்தில் ஊறி வளர்ந்த என்னுடைய சாமர்த்தியம் முழுவதையும் உபயோகித்துப் படுப்பதற்கு ஓர் இடமும் பிடித்து விட்டேன். ஆனால் தூக்கம் வரவில்லை. ஏதேதோ அர்த்தமில்லாத நினைப்புகளில் என் மனம் லயித்துக் கிடந்தது. திடீரென்று கீழேயிருந்து வந்த ஏதோ பேச்சுக் குரல் என் கவனத்தைக் கவர்ந்தது. இருவர் பேசிக் கொண்டிருந்தார்கள் :

"என்ன ஓய்! எப்போது முகூர்த்தம் வைத்திருக்கேள்? திடீரென்று நிச்சயமாச்சா, என்ன?"

"ஆமாம், திடீரென்றுதான் நிச்சயமாச்சு. பையன் டில்லியிலே வேலையாயிருக்கிறான். இருநூறு ரூபாய் சம்பளம். கண்ணுக்கும் லட்சணமாயிருக்கிறான். ஏதோ பிராப்தம் இங்கே இருந்தது, நம் வீட்டுப் பெண்ணுக்கு. அவ்வளவுதான்!"

"அது சரி, போன வருஷம் மாயவரம் கிருஷ்ணய்யர் பிள்ளைக்குப் பார்த்தேள் போல இருக்கே, அது என் நடக்கலே?"

"ஆமாம், அந்தப் பையனுக்குத்தான் நாங்கள் தீர்மானம் பண்ணியிருந்தோம். எல்லாம் பேசி முடிந்து முகூர்த்தம் வைக்க வேண்டியதுதான் பாக்கி. பையனும் பெண்ணை வந்து பார்த்துவிட்டுப் போனான். ஆனால் நம் ஜானகிக்கு அந்தப் பையனைக் கலியாணம் பண்ணிக்கிறதிலே கொஞ்சம் கூட இஷ்டம் இல்லை. ரொம்ப சிரமப்பட்டு அந்த இடத்தைத் தட்டிக் கழித்தோம். பிராப்தம்னு ஒண்ணு இருக்கோன்னோ...!"

என் தலை சுழன்றது. "என்ன துணிச்சல் அந்தப் பெண்ணுக்கு! ஒரு புருஷனுக்குத்தான் ஒரு பெண்ணைப் பார்த்து நிராகரிப்பதற்கு உரிமையுண்டென்றால் ஒரு பெண்ணுக்கும் அந்த உரிமையுண்டோ, என்ன!" என்று என் மனம் எண்ணி ஏங்கியது. மிகுந்த சிரமத்துடன் பேசுவது யார் என்று கவனித்தேன். நான் நினைத்தது சரியாய்ப் போய்விட்டது. போன வருஷம் திருவாரூருக்குச் சென்று நான் பார்த்துவிட்டு வந்த பெண்ணின் தகப்பனாரும் இன்னொருவரும் கீழே உரத்த குரலில் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்!

அவ்வளவுதான்; மறுநாள் சென்னை வந்ததும் என் தீர்மானத்தை மாற்றி, அந்தச் சிதம்பரத்துப் பெண்ணையே முடித்துவிடும்படி என் பெற்றோர்களுக்குக் கடிதம் எழுதினதுதான் நான் செய்த முதல் காரியம்!

### காந்தி மகான் திருவாக்கு — 13

நான் இந்திய தேசிய உடை தரித்திருக்கிறேன். ஏனென்றால், இதுதான் இயற்கையான உடை; இந்திய மக்களுக்குப் பொருத்தமான உடை.

மேல்நாட்டு மக்களைப்போல உடை தரிப்பது, நம்முடைய தாழ்மைக்கும் பலஹீனத்துக்கும் அறிகுறியாகும்.

இந்திய உடை நம்முடைய சீதோஷ்ண ஸ்திதிக்குப் பொருத்தமானது: எளிமைக்கோ, கலைப் பண்புக்கோ, விலை மலிவுக்கோ அதனுடன் போட்டி போட உலகத்தில் வேறு உடையே கிடையாது. இத்தகைய சிறந்த உடையை நாம் வெறுத்து ஒதுக்குவது பெருங் குற்றம்.

இந்தியாவில் உள்ள ஆங்கிலேயர்கள் போலி கௌரவம் பார்க்கிறார்கள்; இல்லாவிட்டால், வெகு காலத்துக்கு முன்னாலேயே அவர்கள் இந்திய உடை தரித்திருப்பார்கள்.




## சந்தர்ப்பம் இல்லை!

மாமனார்:—என்ன மாப்பிள்ளை, ஆறு மாதமாக நீங்கள் நம் குழந்தை சீனுவோடு பேசவில்லையாமே! அவன் அப்படி என்ன தவறு செய்து விட்டான்? உமக்கு அவன் மீது என்ன கோபம்?

மாப்பிள்ளை:—அவன் மீது எனக்கு ஒரு கோபமும் இல்லை. அவன் பேசிக் கொண்டிருக்கும்போது நான் எப்படிக் குறுக்கே பேச முடியும்? எனக்குப் பேச இடம் கிடைத்தால்தானே?

★

## என்னத்தைச் சொல்ல!

மாஜிஸ்ட்ரேட்:— நீ திருடிவிட்டு அந்த வீட்டுப் பின்புற வழியாக ஓடினதைப் பார்த்ததாகப் பத்து சாட்சிகள் சொல்லுகிறார்களே, அதற்கு நீ என்ன சொல்லப் போகிறாய்?

குற்றவாளி:— எஜமான், நீங்க வேணுமானால் சொல்லுங்க! இதோ ஒரு நொடியிலே, நான் திருடினதைப் பார்க்கவில்லை என்பதற்கு நூறு சாட்சிகள் கொண்டு வருகிறேன்!

★

## யாருக்குப் பயம்?

ஒரு போட்டோகிராபர் தொண்ணூற்றெட்டு வயது நிறைந்த ஒரு பெரியவரைப் போட்டோ பிடித்தார்.

போட்டோகிராபர் (படம் பிடித்த பிறகு):—நீங்கள் நூறு வயது வாழ்ந்திருக்க வேண்டும். உங்கள் நூறாவது ஆண்டு விழாவில் உங்களைப் படமெடுக்க வேண்டும். அந்த பாக்கியம் எனக்கு இருக்கவேண்டுமே!

பெரிய மனிதர்:—உங்களுக்கு அப்படியொன்றும் வயதாகி விடவில்லையே! நீங்கள் வாலிபர்தானே? அவசியம் நீங்கள் என் நூறாவது ஆண்டு விழாவுக்கு வந்து படம் எடுப்பீர்கள், பயப்படாதீர்கள்!

## சரிதான்!

விருந்துக்கு வந்தவர் (அந்த வீட்டுக் குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு):— குழந்தை முகஜாடையில் அப்படியே அம்மாவைக் கொண்டிருக்கிறான்!

தாயார்:— ஆனால், அந்த எடுப்பான மூக்கு அவன் அப்பாவின் ஜாடை!

குழந்தையின் அண்ணா:—ஆமாம், அம்மா! ஆனால் குழந்தையின் கிலுகிலுப்பை என்னுடையது!

★

## நல்ல தொண்டு!

பொதுஜனம் (சட்டசபை அங்கத்தினரிடம்):—என்ன ஸார், உங்களுக்கு வோட்டுக் கொடுத்து என்ன பிரயோஜனம்? சட்டசபையில் நீங்கள் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லையே!

அங்கத்தினர்:— பத்திரிகை படிக்கும் வழக்கமே உம்மிடம் கிடையாதோ? நேற்று மந்திரி செய்த பிரசங்கத்தில் 'கரகோஷ ஆரவாரம்' என்று போட்டிருப்பதெல்லாம் அடியேனுடைய தொண்டுதான்!

★

## நியாயந்தானே!

"நீ அவளைக் காதலிப்பதாகச் சொன்னாயே, அது என்னவாயிற்று? கல்யாணம் நிச்சயமாகி விட்டதா?"

"இல்லை, அவள் அதற்குச் சம்மதிக்கவில்லை!"

"நீ உன் குடும்ப கௌரவத்தைப் பற்றி அவளிடம் சொன்னாயோ? உன் பணக்கார



மாமாவைப் பற்றி அவளிடம் பிரஸ்தாபித்தாயோ?"

"ஆமாம், என் மாமாவைப் பற்றித்தான் அவளிடம் பிரஸ்தாபித்தேன். அவள் என்ன செய்தாள், தெரியுமா? என் மாமாவையே கல்யாணம் செய்து கொண்டு விட்டாள்!"

கோத்தகிரி மகாத்மா காந்தி ஞாபகார்த்த
போர்டு உயர்தர பாடசாலை கட்டிட நிதிக்காக



## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி

உதவும் சங்கீதக் கச்சேரி

*

சங்கீதரத்ன ஸ்ரீ சௌடய்யா ... பிடில்
ஸ்ரீ கல்பாத்தி ராமநாதன் ...மிருதங்கம்
ஸ்ரீ ஆலங்குடி ராமச்சந்திரன் ... கடம்

*

9-5-48 ஞாயிறு மாலை 2-30 மணிக்கு

## உதகை ப்ளூமவுண்டன் டாக்கீஸில்

டிக்கெட்டுகள்: ரூ. 250/- 100/- 50/- 25/- 10/- 5/-

கோத்தகிரி ம. கா. ஞா. போ. உ. பா. கட்டிட நிதிக் கமிட்டி

மைக் & ஒலிபெருக்கி ஏற்பாடு: திருச்சி ரேடியோ சேல்ஸ் & சர்வீஸ்

## தசைப்பிடிப்பு, வலி, ஓய்ச்சல்

முதலியவைகளுக்குத் துரிதமாக
ஆறுதலளித்து சொஸ்தமளிக்கிறது



ஜாம்பெக்கை ஒரு முறை தடவினாலேயே வலி அநேகமாய் உடனேயே மறைந்து போகும்.

ஜாம்பெக்கிலுள்ள உயர்ந்த மூலிகைத் தைலம் வலியையும் பிடிப்பையும் அகற்றி, தசைக்கு ஹிதமளித்து அதி சீக்கிரமாய் சொஸ்தமளிக்கும்.

வெட்டுப் புண்கள், சுட்டப் புண், பூச்சி கடி, சிராய்த்தல், கமச்சல், மூலம், எக்ஸிமா மற்றும் இதர வியாதிகளுக்கு ஜாம்பெக்கின் சுத்தமாக ஆறுதலளித்து சுகப்படுத்தும் குணம் மிக்க இன்றியமையாதது.




# Zam-Buk

உலகப் பிரசித்திப் பெற்ற மூலிகைக் களிம்பு
மிருகக் கொழுப்பின்மைக்கு உத்தரவாதம்

ஏஜண்டுகள்:—மெஸர்ஸ். தாதா & கோ., லி. டி. மதராஸ்

# மாய மரம்



-சாமா

ராஜி

ஓர் ஆற்றங் கரை அருகில் ஒரு மாமரம் இருந்தது. அந்த மரம் வெகு காலமாக அங்கே இருந்து வந்தது. வேலன் என்ற சிறுவனுக்கு அந்த மரத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது. அவன் அந்த ஊருக்குப் புதிது. தன் பாட்டியைப் பார்த்துவிட்டுப் போவதற்காக அடுத்த ஊரிலிருந்து அவன் வந்திருந்தான்.

ஒரு நாள் பாட்டியும் பேரனும் அந்த ஆற்றங் கரையோரத்தில் உலாவிக் கொண்டிருந்தார்கள். அப்போது பாட்டி, "வேலா, இந்த மாமரத்தைப் பார்த்தாயா? இதை ஒரு மாய மரம் என்று சிலர் சொல்லுகிறார்கள். யாருக்கு என்ன விருப்பம் இருந்தாலும் சரி, அதை நினைத்துக் கொண்டு இந்த மரத்தைத் தொட்டால் உடனே கைகூடி விடுமாம்!" என்றான்.

இதைக் கேட்ட வேலன், "பாட்டி, நான் போலீஸ் இன்ஸ்பெக்டரின் மகனாக்கும்! இந்தக் கட்டுக் கதைகளை யெல்லாம் நம்பமாட்டேன்!" என்று சிரித்துக் கொண்டே சொன்னான்.

அதற்குமேல் பாட்டி ஒன்றும் சொல்லவில்லை. வேலனை அழைத்துக் கொண்டு வீட்டுக்கு வந்துவிட்டான். சாயங்காலம் வேலன் என்ன நினைத்துக் கொண்டானோ என்னமோ, பாட்டிக்குத் தெரியாமல் மெதுவாக ஆற்றங் கரைக்கு வந்து மாய மரத்தை நெருங்கினான். மரத்தை என்ன வரம் கேட்கலாம் என்று சிறிது நேரம் யோசித்தான். பிறகு, "நேற்றிரவு நம் தகப்பனார் பக்கத்துத் தெருவிலிருக்கும் ஒரு வீட்டிலிருந்து விலை உயர்ந்த முத்து மாலை யொன்றை எவனோ திருடிக் கொண்டுபோய் விட்டாரென்றும், அந்தத் திருடனைத் தம்மால் கண்டு பிடிக்க முடியவில்லையென்றும் வருத்தப்பட்டுக் கொண்டிருந்தாரே, அந்தத் திருடன் அகப்படட்டும்!" என்று நினைத்துக் கொண்டு, அவன் மாய மரத்தைத் தொட்டான்.

உடனே மரக் கிளைகள் அசைந்தன. அடுத்த நிமிஷம் பக்கத்திலிருந்த புதரிலிருந்து ஒரு மனிதன் வேலனுக்கு அருகில் வந்தான். அவன் வேலனுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு, "இந்த மரத்தினருகில் என்ன செய்துகொண்டிருந்தாய்?" என்று கேட்டான்.

"ஒன்றும் செய்யவில்லை ..." என்று பயத்தினால் நடுங்கிக்கொண்டே சொன்னான் வேலன்.

அந்த மனிதன், "உண்மையைச் சொல்லப் போகிறாயா, இல்லையா?" என்று கடுமையான குரலில் கேட்டான்.

உடனே வேலன், "ஐயா! இந்த மரம் ஒரு மாய மரம். எதையாவது விரும்பி இந்த மரத்தைத் தொட்டால், அது உடனே கிடைக்குமாம்!" என்று சொல்லவே, அவன் வேலன் கைகளை விட்டுவிட்டு, "நீ இவ்விடத்தை விட்டு உடனே ஓடிவிடு!" என்றான்.

வேலன் போனபிறகு அந்த மனிதன் மரத்தைத் தொட்டுக் கொண்டே,

"இப்பொழுது இவ்விடத்தை விட்டு நான் ஓடிவிட எனக்கு ஒரு குதிரை வேண்டும்!" என்று சொன்னான். உடனே மரக் கிளைகள் அசைந்தன. அடுத்த நிமிஷம் அவன் ஆச்சரியப் படும்படி ஒரு குதிரை வெகு வேகமாக ஓடி வந்து அவனுக்கு எதிரே நின்றது.

"சந்தேகமில்லை; இந்த மரம் மாய மரம்தான்!" என்று சொல்லிக் கொண்டே அவன் குதிரையின்மீது ஏறி, 'சலோ!' என்றான். உடனே குதிரை வெகு வேகமாகப் புறப் பட்டது. குதிரை அவ்வளவு வேக மாகப் போனது அந்த மனிதனுக்குப் பிடிக்க வில்லை. அதுவு மல்லாமல் அந்தக் குதிரை அவன் போக வேண் டிய வழியாகப் போகாமல் தன் வழியே போக ஆரம்பித்தது. அந்த மனிதன் லகானை எவ்வளவோ இழுத் துப் பார்த்தான்; குதிரை நிற்கவில்லை. அது தன்பாட்டுக்கு ஓடி, திடீரென்று ஒரு வீட்டுக்கு முன்னால் நின்றது. அந்த வீட்டு வாசலில் 'இன்ஸ்பெக் டர் உமாபதி' என்று ஒரு போர்டு தொங்கிக் கொண்டிருந்தது!

குதிரை வந்து நின்ற சத்தத்தைக் கேட்டதும் போலீஸ் இன்ஸ்பெக்டர் வெளியே வந்தார். அவர் குதிரையைப் பார்த்ததும், "இது என் குதிரை யல்லவா? உனக்கு எப்படி இந்தக் குதிரை கிடைத்தது?" என்று அந்த மனிதனைக் கேட்டார். அவனிட மிருந்து ஒரு பதிலும் வரவில்லை. இன்ஸ்பெக்டர் அந்த மனிதனுக்கு அருகில் சென்று பார்த்தார். அவ் வளவுதான்; அவருக்குத் தூக்கிவாரிப் போட்டது. "அடாடா! அடுத்த தெருவில் முத்து மாலை திருட்டுப் போன வீட்டில் வேலை செய்து கொண் டிருந்த வேலைக்காரன் அல்லவா, நீ? உன்னைத்தானே அப்பா, நான் தேடிக் கொண்டிருக்கிறேன்!" என்று சொல் லிக் கொண்டே, அவன் சட்டைப் பையில் கையை விட்டார். காணமற் போன முத்து மாலை அவன் பையில் இருந்தது!

மறு நாள் காலை பாட்டியின் வீட்டி லிருந்து வேலன் தன் வீட்டுக்கு வந் தான். அவன் வந்ததும் வராததுமாக, "அப்பா, திருடனைக் கண்டு பிடித்து விட்டாயா?" என்று தன் தகப்ப னாரைக் கேட்டான்.

"பிடித்தாய் விட்டது!" என்று நடந்த சமாசாரங்களைச் சொன்னார் தகப்பனார்.

"இதற்கெல்லாம் காரணம் பாட்டி யின் கிராமத்தி லிருக்கும் மாய மரம் தான்!" என்றான் வேலன்.

இன்ஸ்பெக்டர் இதை நம்பவில்லை. ஆயினும் வேலன் மட்டும், "மாய மரம் தான் நான் கேட்டுக் கொண்டபடி திருடனைக் கண்டுபிடித்துக் கொடுத் தது; அதுவேதான் திருடன் கேட்ட படி குதிரையையும் கொடுத்து உத விற்று!" என்று எல்லோரிடமும் சொல்லிக் கொண்டிருக்கிறான்!



ஒருவர்:—ஏன் ஸார், நீங்களும் ஒரு கை பார்க்கிறதுதானே?
மற்றொருவர்:—ரொம்பக் களைப்பா யிருக்கிறது; நடந்தே வீட்டுக்குப் போய்விடுகிறேன்!




இரவு இந்த சனியன்கள் உங்களை சுக நிம்மதியாக தூங்க விடாது கடித்து ஹிம்ஸிக்கையில் அவைகளிலிருந்து நிவர்த்திபெற ஏதாவது உறுதியான வழி யில்லையா? ஆம் உண்டு! விசேஷ சக்தி வாய்ந்த டிட காஸினி நீர் தூவியாகிய டார்ச் பிராண்டால் கண்ணிற்படும் எல்லா கொசுக்களையும் உங்களுக்கு கட்டாயம் சீக்கிரம் கொல்ல முடியும். பூச்சிகளை சாக அடிக்கும் வன்மைக்கு டார்ச் பிராண்ட் நிகரற்றது. கொசுக்களுக்கு அதன் மூலம் சாவு நிச்சயம்! நோய்ப் பரப்பிகளாகிய ஈ, தெள்ளுப் பூச்சி, மூட்டை கரப்பு, பேன் முதலிய பூச்சிகளுக் கெதிராகவும் அதை உபயோகியுங்கள். வீட்டில் டார்ச் பிராண்ட் எப்போதும் கையோடு காவலாய் வைத்திருப்பது நலம்.




# டார்ச் பிராண்ட்

பிராக்ரெஸ்ஸிவ் கெமிகல்ஸ் கார்ப்பொரேஷன் லிட்.

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிட்.

D. D. T. 1396

## கலைத் தேவி கைங்கரியம்



திருவல்லிக்கேணி தேசியப் பெண்கள் பாடசாலையின் புதிய கட்டிடத்துக்கு ஸ்ரீ கஸ்தூரி கோபாலன் அவர்களால் அஸ்திவாரம் இடப்பட்டது. இந்த வைபவத்திற்குச் சென்னை ஹைகோர்ட் சீப் ஜஸ்டிஸ் கனம் ராஜமன்னார் தலைமை வகித்தார்.

---

# ஈயைக் கொல்ல மருந்து!

**ராஜம்**

பராங்குசம் தன்னுடைய கம்பெனி வசூல் சம்பந்தமாக ஒரு முறை வெளியூருக்குப் போயிருந்தான். யாரைத்தேடிப் போனானோ அந்த ஆள் ஊரில் இல்லை. ஆகையால் அவர் வரும்வரை காத்திருக்க நேர்ந்தது. சும்மா உட்கார்ந்திருக்கும் நேரத்தில் முக க்ஷவரம் செய்து கொள்ளலாம் என்று ஒரு க்ஷவரச் சாலைக்குள் நுழைந்தான். அங்கிருந்த நாவித முத்து ஒரு பழைய துருப்பிடித்துப் போன கத்தியை எடுத்து வைத்துக்கொண்டு பராங்குசத்தினுடைய முகத்தில் 'வரட்டு' 'வரட்டு' என்று இழுத்தான்.

க்ஷவரம் முடிந்ததும், பராங்குசம் எழுந்து கன்னத்தைத் தடவிப் பார்த்துக் கொண்டே, "கூலி எவ்வளவு அப்பா கொடுக்க வேண்டும்?" என்று கேட்டான்.

முத்து சற்று நேரம் வரை யோசனை செய்துவிட்டு, "நாலணாக் கொடுத்தால் போதும் ஸார்!" என்றான்.

பராங்குசம் பதில் ஒன்றும் பேசாமல் நாலணாவை எடுத்து அவன் கையில் கொடுத்தான். பிறகு, "என்னப்பா, இங்கே ஈ உபத்திரவம் அதிகமாக இருக்கிறதே!" என்று கேட்டான்.

"நான் என்ன பண்ணுவது, சாமி! என்னென்னவோ செய்து பார்த்தேன், முடியவில்லை" என்றான் முத்து.

"அப்படியா! ஆனால், நான் ஒரு வழி சொல்லுகிறேன். அதன்படி செய்வீரா? ஒரு நிமிஷத்துக்குள் எல்லா ஈக்களும் பறந்தோடிப் போகும்!"

"சொல்லுங்கள்! சொல்லுங்கள்!" என்றான் முத்து.

"இதோ, இந்த ஈக்களில் ஒன்றைப் பிடி. அதற்கு இந்தக் கத்தியாலேயே க்ஷவரம் செய்து விட்டு, நாலணாக் கூலியையும் அதனிடம் கேள். அப்புறம் ஒரு ஈயாவது இந்தப் பக்கம் எட்டிப் பார்த்தால், சொல்!" என்றான் பராங்குசம்.

# அனுதாபக் கடிதம்

ஏ.கே. பட்டுசாமி

"ஏ புஷ்பா! என் பர்ஸை நீ எடுத்தாயா?"

"இல்லையே!"

"என்ன இல்லையே! கோட்டு வைக்கும் இடத்தில் சில்லறையும், சில்லறை வைக்கும் இடத்தில் கோட்டையும் வைத்திருக்கிறதே, இது யார் வேலை?"

"உங்களைத் தவிர அவ்வளவு ஞாபக சக்தியாக ஒரு காரியத்தைச் செய்ய வேறு யாருக்குச் சாமர்த்தியம் வரும்?" என்று கூறிப் புஷ்பா சிரித்தாள்.

"கர்வம் பிடித்த கழுதை! ஞாபக மறதி உனக்கா எனக்கா?"

"லக்ஷணம்தான்! உடனே எதாவது வைத்தியம் பண்ணிக்கோங்கோ! யாராவது உங்களுக்கு எத்தனை குழந்தைகள்னு கேட்டா, 'இருங்கோ வீட்டிலே கேட்டுண்டு வந்துசொல்றேன்'னு சொல்ற நிலைமைக்கு வந்துடுத்தே வரவர உங்க மறதி!"

இந்தச் சமயத்தில் நல்ல காலமாக என் மைத்துனன் சுந்தரம், அதாவது புஷ்பாவின் தம்பி - ஊரிலிருந்து வந்து சேர்ந்தான். உடனே நான் புஷ்பாவிடமிருந்து தப்பித்துக்கொள்வதற்காக அவன் பக்கம் திரும்பி "என்டா சுந்தரம், இப்பத்தான் வருகிறாயா?" என்று கேட்டேன்.

"ஆமாம்" என்றான் அவன்.

நான் பத்திரிகையை எடுத்துக் கொண்டு போய் திண்ணையில் உட்கார்ந்தேன். அக்காவும் தம்பியும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

"அக்கா, நம்ம கோபாலன் சமாசாரம் உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான் சுந்து.

அப்போது வாசலில் ஒரு கல்யாண ஊர்வலம் போய்க் கொண்டிருந்தது. ஆகையால் என்னுடைய காதில் ஒன்றும் விழவில்லை.

சற்று நேரத்துக்குப் பிறகு மீண்டும் அவர்கள் பேச்சு கேட்டது.

"ஐயையோ! எப்படா சுந்து?" என்றாள் புஷ்பா.

"இப்பத்தான் இரண்டு நாளாச்சு!"

"என்ன வியாதி?"

"பிரஸவித்து ஜன்னி கண்டு போச்சு!"

கோபாலன் என் மனைவியின் தமக்கை பிள்ளை. அவன் மனைவி கர்ப்பமாக இருந்ததாக புஷ்பா என்னிடம் சொல்லியிருந்தாள். அவளுக்குப் பிரசவமாகி அவள் ஜன்னி கண்டு இறந்துவிட்டாளா? ஐயோ பாவம்!

நான் சுந்துவைக் கூப்பிட்டேன்.

"சுந்து, அவள் இறந்துபோய் இரண்டு நாளா ஆச்சு?"

"ஆமாம், அத்திம்பேரே!"

"வீட்டிலா, ஆஸ்பத்திரியிலா?"

"வீட்டில்தான்!"

"அதுதான் தப்பு! நம்ப ஜனங்களுக்கே மூளை கொஞ்சங்கூடக் கிடையாது. ஆஸ்பத்திரியில் கொண்டுபோய் விட்டிருந்தால், இவ்வளவு தூரம் ஆகியிருக்குமா?"

புஷ்பா பேச்சில் கலந்து கொண்டாள்.

"பாவம் நல்ல பெண். புருஷன் மேலே உயிரையே வச்சிருந்தது!" என்றாள்.

நான் ஆற அமர உட்கார்ந்து கோபாலனுக்கு அவன் மனைவி இறந்து போனதைக் குறித்து வருத்தந் தெரிவித்து ஒரு உருக்கமான அநுதாபக் கடிதத்தை எழுதி முடித்தேன்.

சமையலானதும் அவசரமாகச் சாப்பிட்டு விட்டு ஆபீஸுக்குப் புறப்பட்டேன்.

* * *

அன்று ஆபீஸில் வேலை கொட்டி வாங்கியது. மானேஜர் வேறு எரிந்து விழுந்து கொண்டிருந்தார். சுமார் ஒரு மணிக்கு என் பெயருக்கு ஒரு தந்தி வந்தது.



"கமலாவுடன் நாளை மெயிலில் புறப்பட்டு வருகிறேன்.
—கோபாலன்."

எனக்கு ஒரே திகைப்பும் திகிலுமாய்ப் போய்

விட்டது! கோபாலனுடைய மனைவியின் பெயர் தான் கமலா! அப்படியானால் செத்துப் போனது யார்? சுந்து சொன்னது பொய்யா? நான் எழுதிய அனுதாபக் கடிதம் கோபாலனுக்குப் போய்ச் சேர்ந்தால் அதைப்பார்த்து அவன் என்னைப் பற்றி என்ன நினைப்பான்!



என்பாடு வெலவெலத்துவிட்டது. வழக்கத்துக்குக் கொஞ்சம் முன்னதாகவே விடைபெற்றுக்கொண்டு, கோபத்துடன் வீட்டுக்கு வந்தேன். "ஏ சுந்து! இந்தத் தந்தியைப் பார்!" என்றேன்.

சுந்து தந்தியைப் பார்த்தான். பிறகு தன் அக்காவைப் பார்த்து, "அக்கா, நான் காலையில் சொல்லவில்லை! கோபாலன் நாளை சாயந்திரம் வரானாம்!" என்றான்.

எனக்கு வந்த ஆத்திரத்தில் சுந்துவை இரண்டு துண்டாக வெட்டிப் போட்டுவிட வேண்டும்போ லிருந்தது.

"நீ என்னடா சொன்னே! கமலா பிரசவித்துச் செத்துப் போய்விட்டதாகச் சொல்லவில்லையா?" என்று சீறினேன்.

சுந்து சிரித்தான். புஷ்பா குறுக்கிட்டு, "ரொம்ப லக்ஷணம்தான்! தந்துப் பித்துன்னு எதையாவது உளறுறீங்கோ! கோபாலனுடைய மச்சினி பெண்ணைப் பத்தின்னா சொன்னான் சுந்து! அவனுடைய மச்சினி பெண் அதுமாதிரிப் போயிட்ட பயத்தினாலே, கோபாலன் தன் அகமுடையாள் கமலாவைப் பிரசவத்திற்காகப் பட்டணத்து ஆஸ்பத்திரியிலேயே சேர்ப்பதற்கு அழைச்சிண்டு வரப் போவதாகச் சொன்னான்" என்றாள்.

என் மூளை குழம்பியது. வயிற்றைப் பற்றி எரிந்தது.

"என்ன, என்னமோ போல முழிக்கிறேள்?" என்றாள் புஷ்பா.

நான் மெதுவாக விஷயத்தைக் கூறினேன். புஷ்பாவுக்குப் பிரமாதமாகக் கோபமும் துக்கமும் கலந்து வந்து முகம் சிவந்து விட்டது.

"நாளைக்குக் கோபாலன் வந்தால் நான் அவனுக்கு என்ன பதில் சொல்லுவேன்! கமலா முகத்தில் நான் எப்படி விழிப்பேன்!" என்று விசித்து விசித்து அழத் தொடங்கினாள் புஷ்பா.

எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. சுந்துவை யோசனை கேட்டேன்.

"சுந்து, இதற்கு ஏதாவது வழிபண்ண முடியுமா?"

"எனக்கு நீங்கள் இருபத்தைந்து ரூபாய் கொடுப்பதானால் ஒரு வழிசொல்லுகிறேன்" என்றான் சுந்து.

"இருபத்தைந்து இல்லை, ஐம்பது ரூபாய் வேண்டுமானாலும் தருகிறேன். எப்படியாவது என் மானத்தைக் காப்பாற்று!"

உடனே என் பணத்திலிருந்து இருபத்தைந்து ரூபாயை எடுத்துக் கொண்டு சுந்து வெளியே புறப்பட்டான்.

அவன் திரும்பி வந்தபோது இரவு மணி ஒன்பதரை.

"என்னடா சுந்து, எங்கே போயிருந்தாய்?"

"சினிமாவுக்கு அத்திம்பேரே! ரொம்ப ஜோரான படம்!"

எனக்கு வந்த கோபத்துக்கு அளவே இல்லை. ஆனால் வாயை மூடிக்கொண்டு பேசாமல் இருந்து விட்டேன்.

மறுநாள் மாலை சுமார் நாலு மணிக்கு வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து கோபாலனும் கமலாவும் இறங்கினார்கள். என் குற்றமுள்ள நெஞ்சு படபடத்தது. சமாளித்துக் கொண்டு எப்படியோ அவர்களுக்கு வரவேற்புக் கூறினேன்.

சுந்துவும் புஷ்பாவும் ஓடிவந்தனர்.

"என்னடா கோபாலா, அத்திம்பேர் உனக்கு ஒரு கடிதம் எழுதினாரே, அது வந்து சேர்ந்ததா?" என்று கேட்டுவிட்டு என்னைப் பார்த்துச் சிரித்தான் அந்தப் பழிகார சுந்து!

எனக்கு வயிற்றைக் கலக்கியது! ஆனால் கோபாலன் கூறிய பதில் என்னைத் திடுக்கிடச் செய்தது.

"என் மைத்துனி பெண் காலமாகி விட்டதைப் பற்றி துக்கம் விசாரித்து எழுதியிருந்தாரே அந்த லெட்டர்தானே! வந்து சேர்ந்தது!" என்றான் கோபாலன்.

எனக்குப் பைத்தியம் பிடித்துவிடும்போல் இருந்தது. நான் எப்போது அந்தமாதிரிக் கடிதம் எழுதினேன்!

"கோபாலா, அந்தக் கடிதம் இப்போது உன்னிடம் இருக்கிறதா? இருந்தால்

கொஞ்சம் கொடு. ஒருமுறை பார்க்கவேண்டும்" என்று கேட்டேன் நான்.

கோபாலன் தன் ஜேபியிலிருந்து அக் கடிதத்தை எடுத்துக் கொடுத்தான். என் அறைக்குச் சென்று அதை நானே ஒரு முறை படித்துப் பார்த்தேன்.

"என் அன்புள்ள கோபாலனுக்கு: உனக்கு எந்த விதத்தில் ஆறுதல் சொல்லுவதென்றே தெரியவில்லை. யார் எவ்வளவு தேறுதல் சொன்னாலும் உன் மனம் எவ்விதம் சமாதானமடையும்? மனத்தைத் தளரவிடாமல் தைரியமாயிரு. உன் அருமைக் கமலாவின் தமக்கை பெண்ணை ஆத்மா சாந்தி யடைவதாக!"

எனக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. நான் கமலாவின் ஆத்மா என்று எழுதியிருந்த வரியைப் பிளந்து தமக்கை பெண்ணை என்ற வார்த்தைகளை யாரோ புதிதாகச் சேர்த்திருக்கிறார்கள்! ஆஹா! அந்த இரண்டு வார்த்தைகளல்லவா என் மானத்தைக் காப்பாற்றின! இது யார் வேலை?

பின்னால் சிரிப்பொலி கேட்டது. "என்ன அத்திம்பேரே! இருபத்தஞ்சு ரூபாய் கொடுக்க மூக்கால் அழுதீர்களே! இப்போது அனுதாபக் கடிதம் எப்படியிருக்கிறது?" என்று கூறிச் சிரித்தான் அந்தப் பொல்லாத சுந்து!

எனக்கு அப்போதுதான் ஞாபகத்திற்கு வந்தது, நான் எழுதிய அக்கடிதத்தைத் தபாலில் சேர்க்காமல் ஞாபகப் பிசகாய் மேஜை மேலேயே வைத்து விட்டு ஆபீஸுக்குப் போய்விட்ட விஷயம்!

சுந்தரம் வாழ்க!

---

# இரகசிய ஆயுதம்

**ஆ. ரங்கநாதன்**

ராகவன் 'கிராண்ட் ட்ரங்க் எக்ஸ்பிர'ஸில் சென்னைக்கு வந்து கொண்டிருந்தான். அவனுக்கு எதிரில், முப்பத்தைந்து நாற்பது வயது மதிக்கத் தக்க ஒருவர் உட்கார்ந்திருந்தார்.

அவர் ராகவனைப் பார்த்து, "தாங்களும் சென்னைக்குத்தானா?" என்று கேட்டார்.

"ஆம். சென்னைக்குத்தான். தாங்கள்?" என்று கேட்டான் ராகவன்.

"நானும் சென்னைக்குத்தான்" என்றார் அவர்.

"தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?"

"நான் பிரிட்டனிலிருந்து வருகிறேன். நான் ஒரு விஞ்ஞானி. இப்போது ஒரு வருஷ ரஜாவில் ஊருக்குப் போகிறேன்" என்றார் அவர்.

கொஞ்ச நேரத்திற்குள் அவர்கள் இரண்டுபேரும் ரொம்ப அன்னியோன்னியமாகி விட்டார்கள். அவர்கள் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

மாலையில் அந்த விஞ்ஞானி தம்முடைய பெட்டியைத் திறந்து அதில் எதையோ வைத்து விட்டு, மறுபடியும் மூடும்போது, அதில் சாமான்கள் அதிகமாக இருந்ததால் மூட முடியவில்லை. அவர் ஒரே ஒரு அட்டைப் பெட்டியை மாத்திரம் எடுத்து ராகவனிடம் கொடுத்து "இதை உங்கள் பெட்டியில் வைத்து வையுங்கள். அப்புறம் வாங்கிக் கொள்கிறேன்" என்றார்.

ராகவனும் அதை வாங்கித் தன் பெட்டியில் வைத்துவிட்டு, "அதில் என்ன இருக்கிறது?" என்று கேட்டான்.

"அதிலா? அதில் ரொம்ப இரகசியமான ஒரு ஆயுதம் இருக்கிறது. அது எவ்வளவு பெரிய யுத்தத்தையும் தடுக்கக் கூடியது. அணுகுண்டுக்கு மாற்று" என்றார் அவர்.

ராகவன் பயந்து போனான். "இதென்ன, விஞ்ஞானியுடன் தொடர்பு வைத்துக் கொண்டது ஆபத்தாக அல்லவா இருக்கிறது!" என்று யோசித்தான்.

* * *

'கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸ்' சென்னையை அடைந்தது. ராகவன் விஞ்ஞானியிடம் விடை பெற்றுக்கொண்டு வீட்டிற்கு வந்து, பிரயாணக் களைப்புத் தீரக் குளித்துக் கொண்டிருந்தான்.

அப்போது கூடத்தில் ஒரே அமளிதுமளியாக இருந்தது. அவன் விரைவில் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு வந்து பார்த்தான்.

என்ன ஆச்சரியம்! அந்த விஞ்ஞானி வாங்கிக் கொள்ள மறந்துபோன அட்டைப் பெட்டியை அவனுடைய குழந்தைகள் எடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.



ராகவன் பயந்து நடுங்கினான். "ஐயோ, இது என்ன ஆபத்து! அணுகுண்டு வெடித்து ஊரெல்லாம் பாழாய்விட்டால் என்ன செய்வது?" என்று அவன் பதைத்தான்.

ஓடிப்போய் அந்தப் பெட்டியைக் குழந்தைகளிடமிருந்து பிடுங்கி உள்ளே என்ன இருக்கிறதென்று பார்த்தான்.

தந்தத்தினால் செய்யப்பட்ட காந்திஜியின் உருவம் ஒன்று அதில் இருந்தது!

# சந்திரஹாரம்

ஆசிரியர் ......... மொழிபெயர்ப்பு

பிரேம்சந்த் ......... ரா. வீழிநாதன்

ஐம்பத்தொன்றாம் அத்தியாயம்

## விடுதலை

அதே பங்களாவில் சரியாகப் பத்து மணிக்கு வழக்கு ஆரம்பமாயிற்று. அப்பொழுது ஆவணி மாதம்; இலேசாகத் தூறிக் கொண்டிருந்தது. கல்கத்தா நகரம் எங்கும் ஒரே ஈரமாக இருந்தது. இருந்தாலும் நியாய ஸ்தலத்தில் வேடிக்கை பார்க்க வந்தவர்களின் கும்பலுக்கு மாத்திரம் குறைவில்லை. தினேஷின் தாயாரும் மனைவியும்கூட வந்திருந்தனர். வழக்கு ஆரம்பமாவதற்குப் பத்து நிமிஷத்துக்கு முன்பு ஜோஹிராவும் பத்மாவும் ஒரு பெட்டி வண்டியில் வந்து இறங்கினார்கள்

முதலில் போலீஸ் விசாரணை ஆரம்பமாயிற்று. டிபுடி சூபரின்டெண்டு, ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர், ஸப் இன்ஸ்பெக்டர், ஹெட் கான்ஸ்டபிள் முதலியவர்களுடைய வாக்கு மூலம் முடிந்ததும் ரமாநாத்தை விசாரித்தார்கள். அவன் தன் வாக்கு மூலத்தில் புதிதாக ஒன்றும் சொல்லவில்லை; தன்னுடைய வாழ்க்கையில், கடந்த ஒரு வருஷத்தில் நிகழ்ந்த சம்பவங்களை மட்டும், ஒன்றுகூட விடாமல் சாங்கோபாங்கமாகச் சொன்னான். வக்கீலின் குறுக்குக் கேள்விகளுக்குப் பதில் அளிக்கையில், பத்மாவின் தியாக உணர்ச்சியும் நல்லொழுக்கமும் உண்மைப் பற்றும் தன்னுடைய கண்களைத் திறந்ததாகச் சொன்னான்.

அதற்கு அடுத்தபடியாக தேவீதீன், ஜோஹிரா, பத்மா மூவரும் விசாரிக்கப்பட்டனர். வக்கீல்கள் அம்மூவரிடமும்கூட எத்தனையோ குறுக்குக் கேள்விகள் கேட்டனர். உண்மைச் சாட்சிகள் அவற்றைக் கண்டு மிரண்டு விடுவார்களா? ஜோஹிரா கொடுத்த வாக்கு மூலம் மிகவும் உணர்ச்சியூட்டுவதாக அமைந்திருந்தது.

“பத்மாவின்மீது ரமாநாத பாபு வைத்திருக்கும் சிரத்தையையும் நம்பிக்கையையும் கண்டு நான் என்னை மறந்தேன். என் நீச வாழ்வு, தன்னைப்பற்றி இவற்றை எண்ணி மனம் உருகினேன். பத்மாவைக் கண்டு பேசிப் பழகியபின், ‘நம் வாழ்க்கை எவ்வளவு கீழ்த்தரமானது; நம் பிழைப்பு எவ்வளவு மானங்கெட்ட பிழைப்பு!’ என்பது விளங்கியது. பத்மாவின் தன்னலமற்ற ஊழியம் என் மனத்தில் கொஞ்சநஞ்சமிருந்த தீய நோக்கங்களையும் அறவே ஒழித்துவிட்டது. ஆகவே, அந்தப் போக வாழ்வை வெறுத்து, பத்மாவைத் தஞ்சம் புகுந்து என் வாழ்க்கையைச் சீர்திருத்திக் கொள்ளுவது என்ற முடிவுக்கு வந்து விட்டேன்” என்றாள் ஜோஹிரா.

ஆனால், பத்மாவினுடைய வாக்குமூலமோ அதையும் தூக்கியடிக்கக் கூடியதாக இருந்தது. அதைக் கேட்டு அங்கே வந்திருந்த அனைவருடைய கண்களிலும் நீர் ததும்பிற்று. அவள் சொன்ன கடைசி வாக்கியங்கள் இவைதாம்:—“என் கணவர் குற்றமற்றவர். கடவுள் சந்நிதானத்தில் மட்டும் அல்ல; நீதி முறைப்படிப் பார்த்தாலும் அவர் குற்றமற்றவரே. என்னுடைய ஆடம்பர வாழ்க்கைக்கு, அவர் பிராயச்சித்தம் செய்ய வேண்டுமென்று அவர் தலையில் எழுதியிருந்தது. அதைத்தான் அவர் செய்தார். அதன் காரணமாகத்தான் அவர் வீட்டைவிட்டு ஓடி வரும்படி ஆயிற்று.

"ஆடம்பர வாழ்க்கைக்கு அடக்கம் கிடையாது என்பதை அவர் மறந்து விட்டார். அதன் காரணமாக என்னைத் தடுத்து அடக்கியிருக்க வேண்டிய இடங்களில் எல்லாம் என்னை அதிகமாக உற்சாகப் படுத்தி விட்டார். இந்த வழக்கில் கூட என்னைக் கஷ்டப்படுத்தப் போவதாகப் பயமுறுத்தினான் போலீஸார் அவர் வாயைக் கட்டிப் போட்டிருக்க வேண்டும் என்று நான் எண்ணுகிறேன்.

"இந்தக் கொலை நடந்த காலத்தில் என் கணவர் பிரயாகையில் இருந்தார். கோர்ட்டார் விரும்பினால் 'டெலிபோன்' மூலம் அதை விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம்; அல்லது முனிசிபல் அதிகாரிகளைக்கூட அழைத்து அதைப் பற்றி விசாரிக்கலாம்."

பத்மாவின் வாக்குமூலம் முடிந்ததும் கோர்ட்டார் சர்க்கார் தரப்பு வக்கீலைப் பார்த்து, "இந்த வழக்கு சம்பந்தமாகப் பிரயாகையிலிருந்து ஏதாவது 'ரிப்போர்ட்' வாங்கப்பட்டதா?" என்று கேட்டார்கள்.

"வாங்கப்பட்டது. ஆனால் இந்த வழக்குக்கும் அதற்கும் யாதொருவிதமான சம்பந்தமும் கிடையாது" என்று பதில் அளித்தார் சர்க்கார் வக்கீல்.

நமாதாத்தின் கட்சியை எடுத்துரைப்பதற்காகச் சர்க்காரே ஒரு வக்கீலை நியமித்திருந்தனர். அவர் எழுந்து, "இதிலிருந்தே குற்றம் சாட்டப்பட்டிருக்கும் நமாதாத் கொலை வழக்கில் சம்பந்தப்படவில்லை என்றாகிறது" என்றார்.

விசாரிப்பதற்கு வேறு சாட்சிகள் இல்லாததால் சர்க்கார் தரப்பு வக்கீல் தன் வாதத்தைத் தொடங்கினார்:— "கனம் கோர்ட்டார் அவர்களே! இதுவரை வந்திராத புதுமாதிரியான வழக்கு இன்று இங்கே வந்திருக்கிறது. உங்களுக்கு ஜனகபுரத்துக் கொலையைப் பற்றித் தெரிந்திருக்கலாம். ஜனகபுரத்துக்குப் பக்கத்தில் உள்ள அநேக கிராமங்களில் அடிக்கடி கொலைகள் நடந்துவந்தன. போலீஸார் கொலைக் கூட்டத்தினரைப் பிடிக்கப் பெருமுயற்சி எடுத்துக்கொண்டனர். வெகு காலம்வரை அவர்களுக்கு வெற்றி கிட்டவில்லை. கடைசியில் ஒருநாள் கொலைக் கூட்டத்தினரைப் பற்றிய விவரம் தெரிய வந்தது. சமயம் பார்த்துப் போலீஸார் எல்லாரையுமே ஒரேயடியாகப் பிடித்து விட்டனர். இம்மாதிரி வழக்குகளில் கோர்ட்டாருக்கு முன்பு சாட்சி சொல்ல ஆட்கள் கிடைப்பது எவ்வளவு சிரமமான காரியம் என்பதை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை.

"கனம் கோர்ட்டார் அவர்களே! போலீஸார் சாட்சிக்கு என்ன செய்வது என்று புரியாமல் சிந்தனையில் ஈடுபட்டிருந்த பொழுதுதான், ஒரு வாலிபன் 'நான்தான் கொலைக் கூட்டத்தினரின் தலைவன்' என்று சொல்லிக்கொண்டு வந்து சேர்ந்தான். அவன் வழக்கைப் பற்றி எல்லாம் தெரிந்தவன்போல அனாயாசமாக வருணிக்க ஆரம்பித்துவிடவே போலீஸார் மயங்கி ஏமாந்துவிட்டனர். இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில், 'இந்த வாலிபனைக் கொண்டு வந்துவிட்டுத் தெய்வமேதான் நமக்குத் துணை புரிந்திருக்கிறது' என்று போலீஸ் எண்ணியதில் யாதொருவிதமான வியப்பும் இல்லை. அந்த வாலிபன் அலகாபாத்திலிருந்து ஓடிவந்தவன்; பட்டினியினால் வாடிக்கொண்டிருந்தான். அவன் தனக்குக் கிடைத்த நல்ல சந்தர்ப்பத்தைக் கைநழுவ விட விரும்பவில்லை. சர்க்கார் தரப்பில் சாட்சி சொன்னால் தண்டனை எதுவும் கிடைக்காது என்ற தைரியமும் அவனுக்கு உண்டாகி விட்டது. போலீஸாருடைய பரிசையும் நன்மதிப்பையும் பெற்று நல்ல வேலையில் அமர்ந்துவிடலாம் என்றும் அவன் நம்பினான்.

"போலீஸாருக்கு ஒரு சாட்சியமும் கிடைத்திராவிட்டால், கைதிகளை விடுதலை செய்திருப்பார்கள்; வழக்கும் தொடர்ந்திருக்கமாட்டார்கள். ஆனால் இந்த வாலிபனுடைய பேச்சில் மயங்கி அவர்கள் வழக்கை நடத்தியே தீருவது என்று முடிவுக்கு வந்துவிட்டனர். இந்த வாலிபனிடத்தில் வேறு என்ன குணங்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும், அபாரமான கற்பனா சக்தி மட்டும் இருக்கிறது என்பதை யாராலும் மறுக்க முடியாது. இவன் அந்தக் கொலை வழக்கைப் பற்றி ஒரு விஷயமும் விட்டுப் போகாமல் கோவையாகவும் தத்ரூபமாகவும் வருணித்தான். அதனால்தான் போலீஸார் வழக்கை நடத்த முன் வந்தார்கள்.

"ஆனால் அதற்குள்ளாக அவனுக்கு இதை விட வேறொரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்திருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. ஒரு வேளை சர்க்காரின் எதிரிகள் ஆசை காட்டி அவனைத் தன் வலையில் போட்டுக் கொண்டிருக்கலாம். அவர்கள் அவனுக்குத் தன் சுய நலத்தைப் பூர்த்தி செய்து

கொள்ளப் புதுப் புது வழிகள் காட்டியிருக்கலாம். பணத்துக்குப் பணமும், புகழுக்குப் புகழும் கிடைக்கக்கூடும் என்று சொல்லியிருக்கலாம். அதுமட்டும் அல்ல; தேசபக்தன் என்ற கௌரவமும் கிடைப்பதற்கு வழிகள் இருக்கின்றன என்று அவர்கள் சொல்லியிருக்கலாம்.

“வாலிபன் தன் சுய நலத்துக்காக எதையும் செய்யத் தயங்காதவன். அவன் தன்னலத்தின் பொருட்டுப் பிறர் கழுத்தை அரிவாள் கொண்டு வெட்டவும் தயங்க மாட்டான். எல்லாம் துறந்த துறவிபோல வேஷம் போடுவதற்கும் தயாராயிருப்பான். சுய நலம்தான் அவனுடைய வாழ்க்கையின் குறிக்கோள். நல்லவேளை, இப்பொழுதாவது அவனுக்கு ஞானோதயம் உண்டாயிருக்கிறதே! அதைக் குறித்து நாம் சந்தோஷப்படத்தான் வேண்டும். குற்றவாளிகளுக்குத் தண்டனை யளிக்காமல் விட்டு விடுவது போலீஸாருக்கு எப்படி ஆபத்தாக முடியுமோ, அப்படியேதான் குற்றமற்றவர்களுக்குத் தண்டனை அளித்தாலும் ஆபத்தாக முடியும். போலீஸார் தங்களுடைய கெட்டிக்காரத் தனத்தைக் காட்டுவதற்காக இம்மாதிரி வழக்குகளை நடத்த முன்வருவதில்லை. சர்க்காரும் போலீஸாருடைய பேச்சைக் கேட்டு வீண் வழக்குகள் நடத்தமாட்டார்கள். அவர்கள் அப்படி நியாயம் தவறி நடப்பவர்கள் அல்ல. இந்த வாலிபனின் சாமர்த்தியமான பேச்சில் போலீஸார் மதிமயங்கி வழக்கை நடத்தினார்கள். அதன் காரணமாக அவர்கள் அவமானப்பட நேர்ந்தது. சர்க்காரும் கணக்கு வழக்கின்றி ரூபாயைத் தண்ணீர் போலச் செலவழிக்க நேர்ந்தது. இதற்கெல்லாம் பொறுப்பாளி யார்? இம்மாதிரி பொய் புனைசுருட்டுகளைச் சிருஷ்டித்து உலகத்தை ஏமாற்றித் திரியும் மனிதனை வெளியே விட்டு வைத்திருந்தால் சமூகத்துக்குக் கேடுதான் விளையும். ஆகவே இவனுக்குத் தனிமையில் உட்கார்ந்து ஆத்ம சிந்தனை செய்வதற்கு வேண்டிய சௌகரியமும் சந்தர்ப்பம் அளிக்க வேண்டியது மிக மிக அவசியமாகிறது. அதற்கு உகந்த இடம் சிறைக்கூடம்தான்.

“கோர்ட்டார் விசாரித்தறிய வேண்டியது என்னவென்றால், அவன் போலீஸாரை ஏமாற்றியது உண்டா இல்லையா என்பது தான். அவன் ஏமாற்றினான் என்ற விஷயத்தில் சந்தேகம் உண்டாவதற்கே இடமில்லை. ஏனென்றால், அவன் சொன்னது போலப் போலீஸார் பலவந்தப்படுத்திப்





"ஏன் கமலா, உனக்கு இப்போது வயது எத்தனை?"

"பதினெட்டு ஆகிறது, மாமி!"

"ஐந்து வருஷத்துக்கு முன்னாலேயும் பதினெட்டு வயது என்று சொன்னாயே?"

"நான் மற்றப் பொம்மனாட்டிகளைப் போல இன்னிக்கி ஒன்று நாளைக்கு ஒன்று சொல்றது கிடையாது, மாமி!"

---

பயமுறுத்தி யிருந்தால்கூட, அவன் கீழ்க் கோர்ட்டுக்குப் பிறகு செஷன்ஸ் கோர்ட்டில் நடந்த விசாரணையில் தன்னுடைய வாக்கு மூலத்தை மாற்றிக்கொண்டிருக்க வேண்டும். ஆனால் அவன் அப்படிச் செய்யாமல் 'மிரட்டலுக்குப் பயந்து அப்படிச் சொன்னேன்' என்று போலீஸார் மீது குற்றம் சுமத்துகிறான். அதிலிருந்தே அவன் சொல்லுவது அவ்வளவும் பொய் என்பதும், அவன் வேண்டுமென்றே தான் அப்படிச் செய்திருக்கிறான் என்பதும் தெளிவாகிறது அல்லவா? ஆகவே, அவனுக்குத் தண்டனை அளிக்காமல் விட்டு விட்டால், இம்மாதிரியான குற்றங்களைச் செய்ய மற்றவர்களுக்கும் துணிவு உண்டாகி விடக்கூடும்; அவர்களுடைய துராசைகள் இன்னும் அதிகரித்து விடவும் கூடும். ஆகவே இவனுக்குக் கட்டாயம் தண்டனை கொடுத்தே தீரவேண்டும் என்று தான் நான் சொல்லுவேன்."

சர்க்கார் தரப்பு வக்கீல் தன் பேச்சை முடித்துக்கொண்டு உட்கார்ந்ததும் ரமாநாத்தின் வக்கீல் தன் கட்சியைத் தெரிவிப்பதற்காக எழுந்தார் :—"இந்த வழக்கு மிக மிக அதிசயமான வழக்கு என்பதில் சந்தேகமில்லை. ரமாநாத் சர்வ சாதாரணமான ஒரு வாலிபன்; அதிகமாகக் கல்வியில் தேர்ச்சி பெற்றவனும் அல்ல; உயர்ந்த நோக்கங்கள் கொண்டவனும் அல்ல. அலகாபாத் நகர சபையில் சுங்கம் வசூலிக்கும் குமாஸ்தாவாக வேலை பார்த்து வந்தவன். அவன் தன் தொழில் முறைப்படி வியாபாரிகளிடம் 'மாமூல்' வாங்குவது உண்டு. அவன் வரவுக்கு மிஞ்சிச் செலவு செய்து வந்தான். ஒரு நாள் கணக்குக் கூட்டிப் போடும் பொழுது தவறு ஏற்பட்டு விட்டது. பணம் குறைந்திருப்பது போல் தோன்றவே, அவனுக்கு 'நாம் தான் பணத்தை எடுத்துச் செலவழித்து விட்டோமோ?' என்ற சந்தேகம் ஏற்பட்டு விட்டது. அந்த பீதியில் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஊரை விட்டு ஓடிவந்து விட்டான். ஆபீஸில் அவன்மீது சந்தேகப்பட்டுக் கணக்கைப் பரிசோதித்துப் பார்த்தார்கள். மொத்தம் கூட்டிப் போடுவதில் தவறு ஏற்பட்டிருந்ததே யொழியப் பணம் குறையவில்லை. ஆகவே அவன் பணத்தைக் கையாடவில்லை என்பது ஊர்ஜிதமாய் விட்டது."

பிறகு ரமாநாத் போலீஸாரின் கையில் சிக்குண்டது, சர்க்கார் தரப்பில் பொய்ச் சாட்சியம் சொல்லச் சம்மதித்தது, பத்மா அவனுடைய மனதை மாற்ற முயன்றது, கடைசியில் அவன் ஜட்ஜிடம் போய்ச் சகல விருத்தாந்தங்களையும் சொல்லித் தன் பிழையை ஒப்புக் கொண்டது முதலிய வரலாற்றை விஸ்தாரமாகச் சொல்லிவிட்டு அவர் மேலும் சொன்னதாவது :—

"ரமாநாத் பொய்ச் சாட்சியம் சொல்லவில்லை என்பதைப் பற்றி வாதாட நான் இங்கே வரவில்லை. ஆனால் அவன் அப்போது இருந்த நிலைமையையும், அவனுக்குப் போலீஸார் காட்டிய ஆசை வார்த்தைகளையும் நான் கோர்ட்டாருடைய கவனத்துக்குக் கொண்டு வந்தால், அவன் செய்த குற்றம் அவ்வளவு பெரிதாகத் தோன்றாது. அவனுடைய பொய்ச் சாட்சியத்தின் பலனாக நிரபராதிகளுக்குத் தண்டனை கிடைத்திருக்குமானால் அது வேறு விஷயம். ஆனால் பதினைந்து வாலிபர்கள் உயிர் தப்பினார்கள் என்னும் விஷயத்தையும் இந்தச் சந்தர்ப்பத்தில் நான் கோர்ட்டாரின் நினைவுக்குக் கொண்டுவர விரும்புகிறேன். அப்படியிருக்கும் பொழுது அவன் பொய்ச் சாட்சியம் சொன்னதற்காகக் குற்றவாளி ஆவானா? அப்படிக் குற்றம் சாட்டுவதுதான் உசிதமாகுமா? அவனே பொய்ச் சாட்சியம் சொன்னதாக ஒப்புக்கொள்ளும் பொழுது, அவனுக்குத் தண்டனை அளித்துத்தான் ஆக வேண்டுமா? அவனுடைய

நேர்மை, பெருந் தன்மை காரணமாக ஒரு வேசியின் மனமே மாறியிருக்கிறது; அவனைக் கெடுத்துத் தன் கைக்குள் போட்டுக் கொள்வதற்குப் பதிலாக, அவள் அவனுக்கு வழி காட்டும் விளக்காக ஆகிவிட்டாள் என்பதையும் கோர்ட்டார் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

"கடமையிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கும் பத்மாவுக்கு இந்தத் தண்டனை தானா தகுந்த வெகுமதி? பத்மாதான் இந்த வழக்கில் பிரதான அங்கம் வகிப்பவள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. அவள்மட்டும் சரியான சமயத்தில் வந்து உதவி செய்திராவிட்டால் பதினைந்து குடும்பங்கள் அழிந்துபோயிருக்கும். பதினைந்து குடும்பங்களுக்கு அபயப் பிரதானம் அளித்தவள் அவள்தான்.

"போலீஸாருடன் ஒத்துழைத்தால் இகலோக வாழ்வு இனிது நடைபெறும், குடும்பக் கவலைகளிலிருந்து விடுதலை கிடைக்கும் என்பது அவளுக்குத் தெரிந்த விஷயம்தான். ஆனால் அவள் சகலவிதமான கஷ்டநிஷ்டூரங்களையும் சகித்துக் கொள்ளத் தயாராயிருந்தாள். ஏன் தெரியுமா? தர்மத்தின் மீதுள்ள பற்றுதல் காரணமாகத்தான்! அந்தப் பற்றுதலுக்கு வெகுமதி, கணவனைப் பிரிந்து அவள் அல்லலுற வேண்டும் என்பதுதானா? உயர்ந்த கல்வி யறிவற்ற ஒரு சாதாரணப் பெண்மணியிடத்தில் இவ்வளவு உறுதியும், இவ்வளவு நம்பிக்கையும், இவ்வளவு தியாகமும் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் தெய்வத்தின் தூண்டுகோலாக இருக்கவேண்டும் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா? அதுமட்டும் அல்ல; நீச வாழ்வு வாழ்ந்து வந்த ஒரு வேசி இந்தக் காரியத்துக்காக பத்மாவுடன் ஒத்துழைக்க முன் வந்தாளே, அதை அர்த்தமற்ற செயல் என்று சொல்லித் தள்ளிவிட முடியுமா? என்னைக் கேட்டால் 'முடியாது, முடியவே முடியாது' என்றுதான் நான் சொல்லுவேன்.

"இம்மாதிரி வழக்குகள் தினந்தோறும் வருவதில்லை. உங்கள் வாழ்க்கையில் இம்மாதிரி வழக்கு இனிமேல் வருமோ, வாராதோ சொல்லுவதற்கில்லை. நீங்கள் இங்கே வழக்குக்கு நியாயம் வழங்குவதற்காக உட்கார்ந்திருக்கிறீர்கள். ஆனால் இந்த நியாய ஸ்தலத்துக்கு வெளியே இதைவிட இன்னும் பெரிய ஒரு நியாய ஸ்தலம் இருக்கிறது என்பதையும், அது நீங்கள் வழங்கியது நியாயம்தானா, இல்லையா என்பதை ஆலோசிப்பதற்காகக் காத்திருக்கிறது என்பதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆகவே, அந்த நியாயஸ்தலம் எதை நியாயம் என்று ஒப்புக் கொள்ளுமோ, அதே நியாயத்தைத்தான் நீங்கள் பத்மாவுக்கு வழங்க வேண்டும். அதுதான் நியாயமும் ஆகும்.

"பொய் சொன்னதற்கு வருந்தி உண்மையை ஒப்புக்கொண்டதற்காக ஒருவனைக் குற்றவாளி என்று சொல்லுவீர்களானால் நீங்கள் உலகத்தாருக்கு நியாயத்தின் உயர்வையும் சிறப்பையும் எடுத்துக் காட்டவில்லை என்றுதான் சொல்ல வேண்டியதாக இருக்கும்" என்று சொல்லிவிட்டு உட்கார்ந்தார்.

அவர் உட்கார்ந்ததும் சர்க்கார் தரப்பு வக்கீல் அதற்குப் பதில் அளிப்பதற்காக எழுந்தார்:—"தர்மத்தின் சிறப்பும் நியாயத்தின் உயர்வும் மதிப்புக் குரியவைகள் என்பதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. அதை ஆட்சேபிப்பதற்காக நான் முன்வரவும் இல்லை. ஆனால் எவனொருவன் வேண்டுமென்றே பொய்ச் சாட்சியம் சொன்னானோ, அவன் அவசியம் குற்றம் செய்தவனாகத்தான் ஆகிறான். அதற்குரிய தண்டனை அவனுக்குக் கிடைத்துத்தான் ஆக வேண்டும். அவன் பிரயாகை நகர சபையின் பணத்தைக் கையாடவில்லை; கையாடிவிட்டதாக வீண் பிரமைதான் கொண்டிருந்தான் என்பது உண்மையே. ஆனால் அவன் உண்மையான மனிதனாயிருந்தால் கைது ஆனவுடனேயே உண்மையை ஒளிக்காமல் சொல்லியிருக்க வேண்டும். அவன் தண்டனைக்குப் பயந்து பொய்ச் சாட்சியம் சொல்லிப் போலீஸாரை ஏன் ஏமாற்றினான்? இதைக் கோர்ட்டார் நிர விசாரித்து



கார் சொந்தக்காரர்:—இந்தக் காரை விற்று விடப் போகிறேன். வாங்கிக் கொள்ளுகிறீர்களா? என்ன யோசிக்கிறீர்கள்?

வாங்க வந்தவர்:—ஒன்றுமில்லை. தற்சமயம் என்னிடம் இல்லாதது எதுவும் இல்லையே என்றுதான் யோசிக்கிறேன்.

அறிய வேண்டும். அவன் செய்தது அநுசிதமான காரியம் என்று கோர்ட்டார் நினைத்தால் அவசியம் அவனுக்குத் தண்டனை அளிப்பார்கள் என்றே நம்புகிறேன்” என்று சொல்லிவிட்டு அவர் தம் ஆசனத்தில் உட்கார்ந்தார்.

அதற்குப் பிறகு கோர்ட்டார் தீர்ப்புக் கூற வேண்டிய கட்டம்தான் பாக்கி யிருந்தது. எல்லாருக்குமே ரமாநாத்தின்மீது அநுதாபம் ஏற்பட்டு விட்டது. ஆனால் அவனுக்குத் தண்டனை கிடைக்கப் போவதுதான் நிச்சயமாயிற்றே! ‘என்ன தண்டனை கிடைக்குமோ?’ என்ற ஒரே கேள்விதான் எல்லாருடைய மூளையையும் குழப்பிக் கொண்டிருந்தது. எங்கும் நிசப்தம் நிலவியது. ஜட்ஜ் தம்முடைய தீர்ப்பைச் சொல்ல ஆரம்பித்தார் :—

“வழக்கு என்னவென்றால் வாலிபன் ஒருவன் தற்காப்புக்காகப் போலீஸாரைச் சரண் புகுந்தான். எதற்குப் பயந்து அவன் போலீஸாரைச் சரண் புகுந்தானோ, அது ஆதாரமற்ற பயம் என்பது தெரிந்தவுடன், அவன் தன் வாக்குமூலத்தை மாற்றிக் கொண்டு விட்டான் என்பதுதான். ரமாநாத் சத்தியவந்தனாக இருந்தால் போலீஸாரிடம் சரண் புகுந்திருக்க வேண்டிய அவசியமே அவனுக்கு ஏற்பட்டிராது. பொய்ச் சாட்சியம் சொன்னால் காப்பாற்றுவதாகப் போலீஸார் அவனுக்கு ஆசை காட்டி யிருக்க வேண்டும் என்பதில் சந்தேகத்துக்கு இடமில்லை. இந்த வழக்கில் அவன் தானாகவே சாட்சி சொல்ல முன் வந்திருப்பான் என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. போலீஸார் அவனுக்கு ஆசை காட்டி யிருக்கிறார்கள். அதை அவன் தண்டனைக்குப் பயந்து ஒப்புக்கொண்டிருக்கிறான். யாருக்கு எதிராக அவனைச் சாட்சியம் சொல்லும்படி செய்தார்களோ அவர்கள் உண்மையில் குற்றவாளிகளே என்று போலீஸார் அவனுக்குக் கட்டாயம் நம்பிக்கை ஊட்டி யிருக்க வேண்டும். ஏனென்றால் ரமாநாத் தண்டனைக்குப் பயப்படுவதைப் போலவே நியாயத்துக்கும் பயந்து நடப்பவன். அவன் சுயநலத்துக்காக நிரபராதிகளைச் சிக்க வைக்கத் தயங்காத—பொய்ச் சாட்சியத்தையே தொழிலாகக் கொண்ட ஆட்களில் சேர்ந்தவனாக இருக்கவே முடியாது. அவன் அப்படிப்பட்டவனாக யிருந்தால், தன் மனைவி சொன்னாள் என்பதற்காகத் தன் வாக்குமூலத்தை மாற்றிக் கொள்ள ஒருபொழுதும் சம்மதித்திருக்க மாட்டான்.

“கீழ்க் கோர்ட்டில் வழக்கு முடிந்தவுடனேயே, அவனுக்குத் தன்மேல் மோசடி வழக்கு இல்லை என்பது தெரிந்து விட்டது. ‘அவன் ஸெஷன்ஸ் கோர்ட்டில் தன் வாக்குமூலத்தை மாற்றிக்கொண் டிருக்கலாமே’ என்று ஒரு வாதம் கிளம்பக் கூடும். அவன் அந்தச் சமயம் தன் விருப்பத்தை வெளியிட்டும் இருக்கிறான். ஆனால் போலீஸார் அவனை மிரட்டி அடக்கி யிருக்கிறார்கள். அம்மாதிரிச் சந்தர்ப்பங்களில், தனக்கு அவப் பெயர் கிட்டாமல் இருக்க வேண்டுமே என்பதற்காகப் போலீஸார் அப்படியெல்லாம் மிரட்டித் தன் காரியத்தைச் சாதித்துக்கொள்ள முயற்சிப்பது உண்டு. இந்த வழக்குச் சம்பந்தப்பட்டவரையில் குற்றம் சாட்டப்பட்டவர்கள் குற்றவாளிகள் தான் என்ற விஷயத்தில் போலீஸாருக்குச் சந்தேகமே ஏற்படவில்லை. ரமாநாத் போலீஸாரின் மிரட்டலுக்குப் பயந்தான். அது அவனுடைய கோழைத்தனம்தான். இருந்தாலும் நிலைமையை ஆராய்ந்து பார்த்தால் அவன் மன்னிப்புக்குப் பாத்திரமானவன் என்று தோன்றுகிறது. ஆகவே நான் அவனை விடுதலை செய்கிறேன்” என்று நீதிபதி சொல்லி முடித்தார்.

(அடுத்த இதழில் முடியும்)

## டிராமா கொட்டகையில்




ஒருவர் :—ஏனய்யா? நீர் ஏன் கான்ஸ்டேபிளா? இக்காலவிட்டாச் வேஷமா?

கான்ஸ்டேபிள் :—எதற்கு ஐயா?

முதல்வர் :—என் பர்ஸ் திருட்டுப் போய் விட்டது அதைக் கண்டு பிடிக்கத்தான்!

# கட்டழகி தவமணி தேவி தன் மேனியை மிருதுவாகவும் மென்மையாகவும் வைத்திருக்க லக்ஸ் டாய்லட் சோப்பைத்தான் நம்புகிறார்

அதிருபவதியான இந்த ஸினிமா நட்சத்திரத்தின் அழகு படுத்திக்கொள்ளும் முறை லக்ஸ் டாய்லட் சோப் தான். சருமத்தை சுத்தம் செய்து மிருதுவாக்க இச்சோப்பின் வெண்ணிறம் கொண்ட சுகந்த நுரை போல் வேறெதுவுமில்லை என்பது அவருக்குத் தெரியும். மென்மைவாய்ந்த பூரணப் பொலிவுள்ள மேனியை விரும்பும் எல்லோரையும் அவர் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து தவறாமல் சுத்தம் செய்து கொள்ளும்படி உபதேசிக்கிறார்.




# லக்ஸ் டாய்லட் சோப்

*ஸினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்!*

LTS. 174-23 TM

# சாதாரண ஆம்லெட் தான்—



# ஆனாலும் அதை டால்டாவில் பொரித்தால் தனிருசியே!

முட்டையின் வெள்ளைக்கருவை தனியாக எடுத்து கெட்டியாவதுவரை கடையவும். பிறகு மஞ்சள் கருவைப்போட்டு ஐந்து நிமிஷங்கள் கடையவும். நறுக்கின வெங்காயம், உடைந்தபயறு அல்லது அரிந்த தக்காளிப் பழம், ருசிக்குத் தகுந்தபடி உப்பு, மிளகு. இவைகளைச்சேர்த்துக்கொள்ளவும். பரந்த வாணலியில் பொரிக்குமளவு டால்டாவை சூடாக்கி அதில் கலந்து வைத்திருப்பதை ஊற்றவும். மேல்பக்கம் இலேசாக சிவக்கும்வரை பொரித்து, இரண்டாக மடித்து, மறுபக்கம் திருப்பவும். இந்தப்பக்கமும் சிவந்ததும் சூடாக பரிமாறவும். ரொம்ப ருசியாயிருக்கும்.

நீங்கள் சாப்பிடும் பக்ஷணங்களை டால்டாவினால் எப்படி அதிக ருசியுள்ளதாகச்செய்யலாம் . . . ஒரு சாதாரண சாப்பாட்டிற்கோ அல்லது விசேஷமாகவரும் விருந்தாளிக்கோ என்னென்ன தயாரிப்பது . . . உங்களுக்கு தேவையான தகவல்களுக்கு எழுதுங்கள்.




## தி டால்டா அட்வைஸரி ஸர்வீஸ்

தபால் பெட்டி நெ. 353, பம்பாய் 1

HVM. 76-23 TM

நீங்கள் கவனிக்க வேண்டியது!



குணம் நிறைந்த
கோகுல் கூந்தல்
தைலம்

கூந்தலுக்கு சிறந்த மணமும் மிகுந்த வனப்பும் நிறைந்த வளர்ச்சியும் தருகிறது. ஆயிரக்கணக்கான மக்கள் அதையே உபயோகிப்பதன் உண்மையும் அதுவே






கோகுல் டிரேட் மார்க் கவனித்து வாங்குங்கள்

டி.எஸ்.ஆர்.&கோ
கும்பகோணம்

மதராஸ் ஏஜண்டு:

புஷ்பவனம் ஸ்டோர்ஸ்
பைகிராப்ட்ஸ் ரோடு
திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி ஜில்லாக்கள்
& பாலக்காடுக்கு ஏஜண்டு:

B. பாலபட்டாபி
வைசியாள் தெரு, கோயமுத்தூர்

CHANGE THE
KILLING
HEAT





to cool comfort

SWITCH ON YOUR PELICO FAN



மண்டையைப் பிளக்கும் வெப்பத்தைக் குளிரச் செய்ய உங்கள் 'பெலிகோ' மின்சார விசிறிகளைச் சுற்ற விடுங்கள்.




**PELICO FANS FOR PROVED PERFORMANCE**

பெலிகோ எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ்
லிமிடெட்
கிராண்ட் ட்ரங்க் ரோடு, அமிர்தசரஸ்

டிஸ்ட்ரிபியூட்டர்கள்:

மெஸர்ஸ். கார்டன் உட்ராப்
& கோ., (மதராஸ்) லிட்.,
1/12, வடக்கு பீச் ரோட்,
ஜி. டி. மதராஸ்

## விகடன் பரிமள பாக்குத் தூள்




உலகம் போற்றும் உத்தமர் மறைவை மறவா நினைவூட்டும், இணையற்ற பரிமளம் வீசும் விகடன் பரிமள பாக்குத் தூளை உபயோகியுங்கள். S. I. A. A. பொருட்காட்சியில் முதல் பரிசு பெற்றது. 50 காலணா பொட்டலம் 0-9-0; மாதம் 25-60-100 சம்பளம். விற்பனையாளர் தேவை

●

# மாணிக்க விலாஸ்

11, பீட் :: மதராஸ்-1

---

குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு ஜம்மியின் "லிவர்க்யூர்"

## அறிவிப்பு

எமது டாக்டர் குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி நிபுணர் கீழ்க்கண்ட இடங்களுக்கு குறிப்பிட்டுள்ள தேதிகளில் விஜயம் செய்கிறார். வேண்டுவோர் அவசியம் நேரில் சந்தித்து யோசனைகள் கேட்டுக் கொள்ளலாம்.

| இடம் | தேதி | மணி | விலாசம் |
|---|---|---|---|
| புதுக்கோட்டை | 28-3-48 | காலை 9 முதல் 11 வரை | [illegible] |
| காரைக்குடி | 29-3-48 | காலை 9 முதல் 11 வரை<br>மாலை 3 முதல் 5 வரை | மெஸர்ஸ். ஏ. வி. & சன்ஸ், பிரயாணிகள் தங்குமிடம் |
| தேவகோட்டை | 30-3-48 | காலை 9 முதல் 11 வரை | மெஸர்ஸ். ஸ்ரீ மீனாக்ஷி ஸ்டோர்ஸ் |
| சிவகங்கை | 31-3-48 | மாலை 3 முதல் 5 வரை | மெஸர்ஸ். மீனாக்ஷி & கோ., கெமிஸ்ட்ஸ் |
| மதுரை | 1,2-4-48 | காலை 9 முதல் 11 வரை<br>மாலை 3 முதல் 5 வரை | மெஸர்ஸ் டி.என்.வி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், கெமிஸ்ட்ஸ், வடக்கு சித்திரை வீதி |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 3-4-48 | மாலை 3 முதல் 5 வரை | ஸ்ரீ ஏ. எம். விஸ்வநாதய்யர், பாத்திர வியாபாரம் |
| கரூர் | 5-4-48 | மாலை 3 முதல் 5 வரை | மெஸர்ஸ். சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |

●

### ஜம்மி வெங்கட்ரமணய்யா & சன்ஸ்

மதராஸ் — திருச்சினாப்பள்ளி

குழந்தைக்கு முக்கியமானது **பேபி கிரைப்** குழந்தைக்கு ஆரோக்கிய மளிப்பது

குழந்தைகளுக்கு உண்டாகும் வாயு வயிற்றுப் பொருமல், வயிற்று வலி, அஜீரணம், மாந்தம், பல் முளைக்கும்போது ஏற்படும் வயிற்றுப் போக்கு முதலிய சகல வியாதிகளையும் போக்கி நல்ல ஆரோக்கியத்தையும் தரும் சிறந்த திராவகம்.

## அயோடிசால்

மிகச் சிறந்த ரத்த சுத்தி மருந்து

இது தேகத்தின் உஷ்ணம் அதிகரித்து அதனால் ஏற்படும் ரோகங்களை குணப்படுத்தி, தேகத்திற்கு ஆரோக்யத்தை கொடுக்கும். ரத்தத்தை சுத்தி செய்து ரத்த விருத்தியையும் உண்டாக்கும்.

## சைபால்

முகப்பரு, சேத்துப் புண், சிரங்கு, வேனல் கட்டி, தீப்பட்ட புண், கரப்பான் முதலியவைகளுக்குக் கைகண்ட மருந்து.

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள் :

**ஸ்ரீ சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி, மதுரை**

ஏஜண்டுகள் :—ராஜன் டிரக் ஸ்டோர்ஸ், நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3; ஸ்ரீராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்—பெஜவாடா, பேர்ஷாம்பூச் ஸ்ரீ செகந்தராபாத்; கிரிஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி.

சிலோன் ஏஜண்டுகள் :—M. O. A. கனி & கோ., 96, சதாம்ஸ் ரோடு, கோட்டை, கொழும்பு

---

# அவளுடைய பொக்கிஷம்

பண்டிட் டி. கோபாலாசார்லுவின்

# அருணா

கர்ப்பாசயரோக நிவாரணி

**ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட், மதராஸ் 17.**

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

REGD. NO. M. 4392















ராஜா
ஸ்னோ,
ஹேர் ஆயில்,
கஸ்தூரி ஸோப்.

FAS-10

MANYAM & CO., BANGALORE – MADRAS – BOMBAY.

பம்பாய் ஆபீஸ்: 142, ஹெர்ன்பி ரோடு ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு சோல் ஏஜெண்டுகள்:
மெஸர்ஸ். துரை. அருள் & கோ., லிட்., 93, செட்டியார் தெரு, கொழும்பு